# பெண்மணிகளுக்குப் பொன்மொழிகள்

"Advice to women"



Acc. No. 28253

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

# பெண்மணிகளுக்குப் பொன்மொழிகள்

அருளியது

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்:

**ஸ்ரீ சுவாமி வேதானந்தா**




வெளியிடுவோர்:

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்,**

சிவானந்தா ஆஸ்ரமம்,

சுவாமி சிவானந்தா சாலை,

இராசிபுரம் : சேலம் மாவட்டம்

விலை] 1993 [ரூ. 10.00

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும், வெளிநாடுகளில் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களிலும் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்டு வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

"பெண்மணிகளுக்குப் பொன்மொழிகள்" என்ற இந்த நூலை ஸ்ரீ சுவாமி வேதானந்தா அவர்கள் மிகமிக அற்புதமாக, தூய எளிய தமிழில், அழகிய முறையில் மொழிபெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை சிவகாசி ஓரியண்ட் லித்தோ பிரஸ் அவர்கள், 'ஆப்செட்டில்' மிகச் சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்கு தேவையான பொருளை வாரி வழங்கிய அன்பர், இப்புனிதமானப் பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப்பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

சிதானந்தா

ஓம்

# பொருளடக்கம்

ஓம்

# பெண் மணிகளுக்குப் பொன் மொழிகள்



## 1. பெண்மணிகளின் கடமைகள்

சீதை, சாவித்திரி, தமயந்தி, நளாயினி, அனுசூயாதேவி, திரௌபதி ஆகியோர் இந்தியாவில், புனிதமான இலக்ஷியப் பெண்மைக்குப் பேர் வாய்ந்தவர்களெனப் பேசப்படுகிறார்கள். அவர்கள் மாட்சிமை தங்கியவர்கள். பிறர் பின் பற்றும் உதாரணப் பெண்மணிகள். தெய்வீகப் பரிபூரணம் என்னும் உச்சநிலையில் நின்று, சிறந்த பெண்மைக்குச் சிகரம் போன்றவர்கள்.

தற்காலப் பெண்கள் இவர்களுடைய வாழ்க்கைகளிலிருந்து ஆவேச உணர்ச்சிகளைப் பெற்று, இவர்கள் சென்ற வழியைப் பின்பற்ற முயல வேண்டும். இவர்கள் இந்தியப் பெண்மணி களின் வாழ்க்கையிலும் ஒழுக்கத்திலும் ஆதிக்கம் செலுத்துமளவு, இதர தேசத்திலுள்ள சகோதரப் பெண்மணிகள் இவர்களை வியப்புடனும் கண்ணியத் துடனும் நோக்குவார்கள்.

இவர்கள் எல்லோரும் மிகவும் கடுமையான சோதனைகளுக்கு உட்பட்டவர்கள். இவர்களுடைய கற்பு, வீரம், பொறுமை ஆகிய பல பண்பாடுகள் கடுமையாகச் சோதிக்கப்பட்டன. அத்தகைய சோதனைகளிலிருந்து கம்பீரமாக வெளியே வந்த உத்தமிகள். ஹிந்துப் பெண்மணிகள், பூர்வீக

நாகரிகத்தின் உதயத்திலிருந்து, சுயநலமற்ற அன்புக்கும் துறவு மனப்பான்மைக்கும் பேர் பெற்றவர்கள்.

ஓர் மனைவி ஓர் ஹிந்து கணவனுக்கு எப்படிப் பட்டவள் என்பது பற்றி இராமாயணத்தில் ஓர் செய்யுளில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ராமர் சீதையைக் குறித்து, ''புத்திமதி கூறுவதில் அவள் எனது நியாயவாதி. செய்கையில் அவள் ஓர் வேலைக்காரி. சமய அனுஷ்டானங்களில், அவள் எனது கூட்டாளி. பொறுமையிலோ பூமா தேவிக்கு நிகராயிருக்கிருள். அன்பிலே என் தாய் போல் நடந்துகொள்கிருள். படுக்கையில் தெய்வீக ரம்பை போலிருக்கிருள். விளையாடும்போது எனது தோழன். ஹே, லக்ஷ்மணா! இப்பேர்ப்பட்டவள் என் அன்பிற்குரிய சீதை'' என்று லக்ஷ்மணனிடம் கூறுகிருர். ஹிந்துக்களில் இலக்ஷிய மனைவி என்பவள் இத்தகைய குண சம்பத்தினளாம்.

ஓர் ஹிந்துப்பெண் தன் கணவன்பால் கொள்ளுகிற நித்தியத்துவ பிரேமையானது அவளை மாதர் உலகத்திலே ஓர் இலட்சிய மனைவியாகச் செய்கிறது. அது அவளை உன்னதமான பண்பாடு கொண்டவளாகச் செய்கிறது. இந்தியாவிலே, இந்தத் தெய்வீகப் பண்பாடு இன்னமும் ஒவ்வொரு பெண்மணியின் இதயத்தின் ஆழத்தில் ஓடிக்கொண் டிருக்கிறது. தேசீய பூரணத்துவத்திலும் கௌரவத்திலும் இதர நாடுகளைக் காட்டிலும் உன்னத நிலையில் இந்தியப் பண்பாடு ஓடிக்கொண் டிருக்கிறது.

வீட்டில் உயிர்ப்பிக்கும் சக்தியே பெண். வீடு என்பது சமுதாய நிர்வாகத்தில் ஒவ்வொரு அமைப்பின் மூலமும் தொடக்கமும் ஆகும்.

தேசத்தின் சிசு போஷண சாலையே அது. எதிர்கால பிரஜா உரிமைக்காகக் குழந்தைகள் பயிற்றுவிக்கப் படும் ஓர் இன்பநிலையம் அது. தாய்மைச் சிறப்பின் வாயிலாக, பெண், வீட்டைச் சோபிக்கச் செய்கிருள். சிசுக்களை வளர்த்தல் போன்ற வீட்டுக் கடமைகளை ஆற்றுவதற்கு ஆடவன் அசக்தன் ஆகிருன். தாயின் நேர் பார்வையிலும் ஆதிக்கத்திலும் திட்டங்கள் வகுத்து, ஒழுங்குக்குட்பட்ட நல்லதோர் குடும்பத் திலே, நல்ல பழக்கங்கள், நன்னடத்தை, நல்ல ஒழுக்கம் அமைதல் ஆகியவை சிசுக்களிடம் அமோகமாய்ச் சிருஷ்டிக்கப்படுகின்றன.

தாயினுடைய நேசிக்கும் பிரேமையும் பண்பட்ட பெருந்தன்மையும், குழந்தைகள் தங்கள் இயற்கையான திறமைகளையும் சூக்ஷ்மமான சாமர்த்தியங்களையும் வெளிப்படுத்துவதற்கு உதவு கின்றன. அனுசரித்தல், பிரஸ்தாபித்தல் ஆகிய வற்றின் மூலமாய் குழந்தைகள் கருத்துக்களைக் கிரஹிக்கின்றன. இளவயதில் கற்றுக் கொண்ட பயிற்சிகளும் உள்ளப் பதிவுகளும் நீடித்தவையா யிருக்கின்றன. வீட்டில் தாய்மார்கள் குழந்தை களுக்கு நல்ல ஒழுக்கத்தை மிகவும் திறமையாய்ப் புகட்டக்கூடும். ஆகவே தாயின் நேர் பராமரிப்பில், குழந்தைகளுக்கு நல்லொழுக்கத்தைப் புகட்டுவதற்கு வீடு ஓர் அழகான பயிற்சிசாலை ஆகும்.

பெண்மணிகள் சமயத்தையும், தேசீய வலிமை யையும், சுபிட்சத்தையும் நிலைநாட்டுவதற்கு உருவான முதுகெலும்பு அல்லது அஸ்திவாரம் போன்றவர்கள். அழகு, அருள், சுபிட்சம் அனைத் திற்கும் அதி தேவதையான லக்ஷ்மி தேவிக்கும் அவளுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை. மனு, ''சதா நல்லதைச் செய்கிறவளும், வேலையில் திறமை வாய்ந்தவளும், பேச்சில் இனிமை

யுடையவளும், தனக்குரிய தர்மங்களில் மிக்க சிரத்தையுள்ளவளும், தன் பிராணபதிக்கு சிசுருஷை செய்பவளுமான பெண்மணி உண்மையில் மனித வர்க்கத்தினள் அல்ல, அவள் ஒரு தேவதையே'' என்று கூறியுள்ளார். தாய் தன் குழந்தைகளைச் சிறந்த முறையில் பயிற்றுவித்தால் அவள் உண்மையில் தேசத்திற்கும், தேசீய கலாச் சாரத்திற்கும் பெருத்த தோர் தொண்டு ஆற்றியவளாகிருள்.

தேசீய சுகாதாரத்தையும் சுபிட்சத்தையும் சீர்திருத்தவும் பெருக்கவும் பெண்மணிகளுக்கு ஏராளமான சந்தர்ப்பங்கள் உண்டு. உண்மை யாக அவர்கள் தேசத்தை உருவாக்குகிருர்கள். தங்கள் சாமர்த்தியங்களையும் திறமைகளையும் பயன் படுத்தி வீட்டை கலாசாரம், ஒழுக்கம், சுயத்திறமை, சமய எழுச்சி ஆகியவற்றின் தொட்டிலாகச் செய் கிருர்கள். ஆகையால் வீட்டுக் கடமைகளைக் கவனிப் பதால் அவர்கள் வாழ்க்கை இறுக்கம் வாய்ந்த தென்றும் வளர்ச்சி தடைபடுகிறதென்றும், சுதந்திர மும் விருத்தியும் அடைவதற்கு அவர்களுக்கு எவ்வித வாய்ப்பும் அளிக்கப்படவில்லை என்றும் குறை கூறுவது தவறு. உண்மையில் வருந்தத்தக்க தோர் தப்பு இதுவே ! ஆடவனைப்போல் ஓர் பெண்ணின் வாழ்க்கை பெருந்தன்மையும் ஆழ்ந்த கருத்தும் வாய்ந்ததாய் விளங்குகிறது. இதற்கு சந்தேகமே கிடையாது. பெண்மணிகள் புன்முறுவல் செய்கிருர்கள். இனிமையாய்ப் பேசுகிருர்கள், பணிவன்பு காட்டுகிருர்கள். வசீகரிக்கத் தக்க உடலமைப்பு வாய்ந்தவர்களாய் கருணையுடன் ஒழுகுகிருர்கள். தேவ தூதனைப்போல் தரிசனம் அளிக்கிருர்கள். வீட்டின் வாழ்க்கையையும் சந்தோஷத்தையும் இத்தனை வகைகளில் நிலைநாட்டு கிறவர்கள் பெண்மணிகளே ஆவார்கள். அவர்கள்

இல்லாத வீடு உண்மையில் சூன்யமானதே. வீடு தன் பிரத்தியேக வசீகரத்தையும் இங்கிதத்தையும் இழந்துவிடும். ஓர் பெண்மணி எத்தகைய நடத்தையும் ஒழுக்கமும் கொண்ட கோட்பாட்டின்படி வாழ முயல வேண்டுமென்பதைப்பற்றி பெரியவர்கள் உபதேசித்துள்ளார்கள். அவைகளைப் பற்றித் தெரிந்து கொண்டால் பெருத்த நன்மை உண்டாகும். ஸ்ரீ ராமர் தம் தாயாரான கௌசல்யா தேவியைப் பார்த்து, ஓர் ஸ்திரிக்கு அவள் உயிரோடிருக்கும் கால பரியந்தம், கணவன் தான் உண்மையில் பிராணபதியும் இறைவனும் ஆகிறான். எல்லாரைக் காட்டிலும் மிக்க பெருந்தன்மை வாய்ந்த பெண்மணி விரதாதிகளையும் நோன்புகளையும் அனுஷ்டித்து வருகிறவளாய்த் தன் கணவனுக்குத் தொண்டு செய்து பிரியத்தைச் சம்பாதிக்காதவளாயிருந்தால் உண்மையில் சுகிர்தமல்லாத எதிர்கால வாழ்வைப் பெறுகிறாள். ஓர் பெண்மணி கடவுளை எப்போதுமே தலைதாழ்த்தி வணங்காமல் தன் கணவனுக்கு சிசுருஷை செய்து அவன் செய்யும் காரியங்களில் ஈடுபட்டு சந்தோஷிப்பாளானால் அவள் மேலான மோக்ஷ லோகத்தை எய்துகிறாள். தொன்றுதொட்டு வழங்கிவரும் தர்மநெறி இதுவே. இது வேதங்களில் விளக்கப்பட்டிருக்கிறது. உலகம் இதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறது. தன் கணவனைக் கைவிடுதலைக் காட்டிலும் மிகுந்த கொடுமை ஓர் பெண்மணிக்கு வேறெதுவுமில்லை. கணவனுடைய கருத்துக்கு இசைந்து கவனித்து ஊழியம் செய்வதே ஒரு பெண்மணிக்கு அமைந்த மஹத்தான தர்மம் ஆகும். ''ஒரு பெண்மணி உயிர் வாழ்கிற கால பரியந்தம் அவளுக்கு ஒரே யஜமானன் அவள் கணவனே'' என்று ஹிதோபதேசம் கூறுகிறது.

துஷ்யந்த மன்னன் அரண்மனைக்குத் தனது ஆசிரமத்தினின்று புறப்பட்டுச் செல்லும் சகுந்தலையை நோக்கிக் கண்வ மாமுனிவர் உபதேசிக்கிறார். முனிவர், 'சகுந்தலா! உன்னிலும் மூத்தோர்களுக்கு ஊழியம் செய். சிற்சில சமயங்களில் உனது பதி கோபித்துக் கொண்டாலும் கூட அவனது விருப்பத்திற்கு மாறாக நடந்து கொள்ளாதே. உன்னை நம்பியுள்ள ஊழியர்களிடத்திலும், உன்னைப் போல கணவனை மணந்துள்ள சக்களத்திகளிடத்திலும், மிருதுவாயும் பிரியமாயும் பேசி ஒழுகி வா, மைத்துனிகளிடத்தில் அன்போடு பழகு. மாமிக்குப் பயந்து கீழ்ப்படிந்து நட. இத்தகைய குணங்கள் உன்னை அரண்மனையில் உண்மையான யஜமானியாக உருவாக்கும். இன்றேல், குடும்பத்திற்கு நீ வேதனையையும் தொந்தரவையும் கொடுத்தவளாவாய்'' என்று உபதேசிக்கிறார்.

தன் கணவன் எழுந்திருப்பதற்கு முன்னமே, விடியற்காலையில் எழுந்து நீராடி, வீட்டுக் காரியங்களைப் புரிவது இல்லாளின் கடமையாகும். திருவள்ளுவர் மனைவி (வாசுகி என்ற பெயரினள்) அவருடைய பாதங்களை வருடிக் கொடுத்து அவர் தூங்கிய பின் தூங்கி, அவர் கண் விழிப்பதற்கு முன் எழுந்திருப்பாள். ஓர் பெண்மணிக்கு உதாரணமாக அவள் விளங்கி பாராட்டப்படுகிறாள். உண்மை நோக்குமிடத்து, ஓர் பெண்ணுக்கு எல்லா ஆபரணங்களிலும் மிக்க உயர்ந்த ஆபரணம் அவள் கணவனே. அவனை விட்டுப் பிரிந்தவள், எப்பேர்ப்பட்ட அழகு ரதியாயிருந்தாலும், வாழ்க்கையில் சோபிப்பதில்லை.

மனைவி நிரம்பவும் கீழ்ப்படிந்தவளாயும், கணவன் அவளுக்குக் கடவுளாயும் இருக்க வேண்டுமென்று ஹிந்து சாஸ்திரங்கள் முழங்குகின்றன. சில

அறிவிலிகள் இதைப் பயன்படுத்திக் கொண்டு, தங்கள் மனைவிகளை தகாத அதிகாரத்துடனும், மிகத் தாழ்மையாகவும் நடத்துகிறார்கள். இது பரிதபிக்கத்தக்கதோர் தவறு அல்லவா? பெண் ஆணுக்கு எவ்விதத்திலும் தாழ்மையானவள் அல்ல. குடும்பம் என்பது ஓர் கூட்டுறவு ஸ்தாபனம். உழைப்பு வகுத்தல் எனும் கோட்பாட்டின் மேல் அது தழைத்தோங்குகிறது. குடும்பத்தில் சம்பாதிக்கிற அங்கத்தினன் என்ற காரணத்தை முன்னிட்டு கணவன் தன் மனைவியைக் காட்டிலும் மேம்பட்டவன் என்று எண்ணலாகாது. பெண்களுக்கு உரித்தான குறிப்பிட்ட துறை இருக்கவே செய்கிறது, குடும்பத்தில் அவர்கள் தாய்மார்கள். தற்காலப் பெண்மணிகளின் அசாதாரணமான திறமைகளும், விவேகச் சம்பத்துக்களும், பிறரை ஆகர்ஷிக்கின்ற உடலமைப்பும் அவர்கள் ஆடவர்களோடு சந்தேகமில்லாமல் சமத்துவமாய் ஒழுகுகிறார்கள் என்பதை நினைப்பூட்டும் நிலையானதோர் ஞாபகச் சின்னமாக விளங்குகின்றன. குடும்பத்தில் பல்வேறு திறப்பட்ட பாத்தியங்களை ஒன்று திரட்டுவதற்கு பெண்மணிகளின் சுய செல்வாக்கு இன்றியமையாதது. குழந்தைகளை வளர்ப்பதற்கும் சம்ரக்ஷணை செய்வதற்கும் பெண்களால் மாத்திரமே முடியும். ஹிந்து மனைவிமார் தத்தம் குடும்பங்களில் இராணிகளாக இருக்கிறார்கள். கணவன்மார் தத்தம் மனைவிமார்களை ஆழ்ந்த காதலும் மரியாதையும் கொண்டு நடத்தவேண்டும். எல்லா வகைகளிலும் அவர்கள் சரிசமத்வம் வாய்ந்தவர்களாகக் கருதப்பட வேண்டும். வாழ்க்கையில் பங்காளிகள் என்ற ரீதியில் அவர்களைப் பாராட்ட வேண்டும். ''குடும்பஸ்தன் தன் உறவினர்களுக்கும் தன்னைச் சார்ந்தோர்களுக்கும் முதலில் ஆகாரம் பரிமாறிவிட்டு, எஞ்சியதைத் தன் மனைவியுடன் புசிக்க வேண்டும்'' என்று மனு கூறியுள்ளார்.

மனைவியுடன் ஒழுக வேண்டிய சரிசமத்வ நிலையை இக்கூற்று சுட்டிக் காட்டுகிறது. ஆடவன் சம்பாதிக்கிறான் என்றும், பெண்மணி வீட்டில் தங்கிவிடுகிறாள் என்றும் வைத்துக்கொண்டால், இதனால் பெண்மணி ஆடவனுடன் ஒட்டி வாழ்கிற அடிமை என்று பொருள்படுத்த வேண்டியதில்லை. உண்மையிலே அவள் தேசத்தை நிர்மாணிக்கிறவள். பெண்கள் தத்தம் கணவன் மீது ஓர்வித அதிகாரத்தைச் செலுத்துகிறார்கள் - தங்கள் அன்பு, மென்மைத் தன்மை, வாஞ்சை, கம்பீரம், அழகு, சுயநலமற்ற சேவை, விசுவாசம், தூய்மை, சுய ஆசை மறுத்தல் முதலியவைகளின் மூலமாக.

மேனாடுகளில் பெண் மனைவி ஆகிறாள். இந்தியாவிலோ பெண் தாயாகிறாள். தாய் வணங்கப் பெறுகிறாள். தாய் கிரஹலக்ஷ்மிதேவியாகப் போற்றப் படுகிறாள். ''உன் தாய் உன் கடவுள் ஆகுக'' என்று ஸ்ருதிகள் திடமாகச் சாற்றுகின்றன. கல்கத்தா பல்கலைக் கழகத்தின் உப தலைவராயிருந்து காலஞ் சென்ற ஸ்ரீ அஷுடோஷ் முகர்ஜி என்பவர் தம் தாயாரின் பாதங்களைக் கழுவி, நீரைக் குடிப்பார் காரியாலயத்திற்குப் போவதற்கு முன்பு. இத் தண்ணீருக்கு '' சரணாம்ருதம் '' என்று பெயர். இது ஹிருதயத்தை புனிதப்படுத்தும் ஓர் ஒப்பற்ற மருந்து. மேனாடுகளில் மனைவி குடும்பத்தை நிர்வகிக்கிறாள். இந்தியக் குடும்பத்திலோ தாயார் ஆதிக்கம் செலுத்துகிறாள். மேனாடுகளில் தாய் மனைவிக்கு அடங்கி நடக்கவேண்டும், இந்தியாவிலே மனைவி மாதாவுக்கு அடங்கி நடக்க வேண்டும். இதுவே முறை.

ஓர் பெண்மணி தூய்மை பெற்றவளாயிருப்பின் அவள் ஆடவரைக்காப்பாற்றி தூய்மைப்படுத்துவாள். அவள் ஓர்சமுதாயத்தையே புனிதப்படுத்தக்

கூடும். வீட்டை அவள் ஓர் தெய்வீகக்கோவிலாகவும் ஆக்கக்கூடும். ஹிந்துப் பெண்கள் ஹிந்து சமுதாயத்தின் இரக்ஷகர்களாய் இருந்து வருகிறார்கள். வெளி நாடுகளிலிருந்து இந்தியா மீது படையெடுப்புகள் இருந்துங்கூட, ஹிந்து மதம், ஹிந்து கலாச்சாரம், நாகரிகம் முதலியவை இன்னும் நிலைத்திருக்கின்றன. இதர நாகரிகங்கள் தோன்றி மறைந்தன. ஹிந்துப் பெண்களின் தூய்மையின் காரணமாய் ஹிந்து நாகரிகம் அழியாமல் இருந்து வருகிறது. கற்பை விலைமதிக்கமுடியாத பேறாகவும் அது இழக்கப்பட்டால் ஆத்மாவின் நித்திய அழிவுக்குச் சமமாகுமென்பதாகவும் கருத அவர்கள் கற்பிக்கப் பட்டு வருகிறார்கள். குழந்தைப் பருவந்தொட்டே மதமானது ஹிந்துப் பெண்ணிடம் தோய்ந்து ஊறிக் கிடக்கிறது. ஹிந்துப் பெண்மணிகள் தங்கள் தூயகற்பு மகிமையின் மூலமாய்ப் பிரகாசித்து குடும்பத்தை உற்சாகப்படுத்துகின்றார்கள். ஹிந்து மதமும், கலாசாரமும், நாகரிகமும் நிலைத்திருப்பதன் இரகசியம் இதுதான்.

## 2. பெண்மணிகளுக்கு

"ரகுபதி ராகவ" என்ற வர்ணமெட்டு

1) பதிக்குப் பக்தியுடன் — ஜெய ஜெயராம்
பணிவிடை புரிவாய் — சீதாராம்
பதியே கடவுள் (ஜெ)
பாவித்தல் தர்மம் (சீ)

2) சீதை சாவித்திரீ (ஜெ)
திரௌபதி நளாயினி (சீ)
அனுசுயா தமயந்தி (ஜெ)
அவர்களைப் பற்றுவாய் (சீ)

3) ஹிந்து மதத்திற்கும் —ஜெய ஜெயராம்
தேச பலத்திற்கும் —சீதாராம்
முந்து சுகத்திற்கும் (ஜெ)
முதுகெலும்பு நீ (சீ)

4) கிரஹத்தில் ஜ்வலிக்கும் (ஜெ)
கிரக லெக்ஷ்மி (சீ)
அரசிநீ இல்லத்தில் (ஜெ)
அழகுத் தேவியாம் (சீ)

5) ஆருயிர் நாயகன் (ஜெ)
அன்புநீ செய்தால், (சீ)
பேருய ரெதிர்காலம் (ஜெ)
பெறுவாய் பேதை (சீ)

6) எதுவரினும் கற்பு (ஜெ)
ஏற்றுக் காத்துநில் (சீ)
இது ஸ்த்ரீதர்மம் (ஜெ)
என்றும் மறக்காதே (சீ)

7) வேட்டை உத்தியோகம் (ஜெ)
வேண்டாம் விடுவாய் (சீ)
வீட்டுத் தாயாயிரு (ஜெ)
விளங்கு மில்லாள் (சீ)

8) இருக்கிறது வீட்டில் (ஜெ)
இன்ப வேலைகள் (சீ)
வருங்கால தேசத்தை (ஜெ)
வடிவாக்குவாய் நீ (சீ)

9) பந்த மேனாட்டில் (ஜெ)
பாரியே மாது (சீ)
இந்தியாவில் மாது (ஜெ)
இனிய தாயாம் (சீ)

10) ஆசைப் பாலரை (ஜெ)
அருமை மக்களாய் (சீ)

நேச வுருவாக்கு —ஜெய ஜெயராம்
நினது தர்மம் —சீதாராம்

11) பயிலல் விமானம் (ஜெ)
பழகு நீதிபதி (சீ)
கையில் கம்புகள் (ஜெ)
கடமை அல்லவே (சீ)

12) பெண்மை சீர்மை (ஜெ)
பெயர்ந்து விடாதே (சீ)
கண்ணிய நாணத்தை (ஜெ)
களைந்து விடாதே (சீ)

13) ஆணுடன் சமத்துவம் (ஜெ)
ஆகாதே உரிமை (சீ)
காணுமிக் கொள்கை (ஜெ)
காண்பாய் மேனுடு (சீ)

14) வருசீர் தாயாய் (ஜெ)
வணங்கப்படுகிருய் (சீ)
பெருமை இதைவிட (ஜெ)
பேதை தேவையோ (சீ)

15) சாப நாகரிகம் (ஜெ)
தருவது காமம் (சீ)
ஆபத்திது விடு (ஜெ)
அடைவாய் எளிமை (சீ)

16) ஏரான முகத்திற்கு (ஜெ)
எழிலான பௌடரோ? (சீ)
சீரான உதட்டிற்கு (ஜெ)
சிவப்புப் பசையோ ? (சீ)

17) சிறுமைப் பொருள்கள் (ஜெ)
சீ ! விலை அதிகம் (சீ)
வறுமைக் கணவன் (ஜெ)
வருவாய் போதாது (சீ)

18) விரைவில் அழகை — ஜெய ஜெயராம்
வீணாக்கி மேல்தோல் — சீதாராம்
திரைகளை நிரப்பும் (ஜெ)
தீமைப் பொருள்களே (சீ)

19) அழகு பொய்யழகு (ஜெ)
ஆரையும் மயக்கும் (சீ)
அழகுகளுக் கழகு (ஜெ)
ஆகும் நின் ஆத்மா (சீ)

20) எளிய உடையணி (ஜெ)
எளிய உணவுகொள் (சீ)
எளிய வாழ்விலிரு (ஜெ)
எண்ணமோ உயர்வு (சீ)

21) தூய்மை எண்ணம் (ஜெ)
துலங்கும் பண்புகள் (சீ)
வாய்மை நகைஇவை (ஜெ)
வானுயர் மதிப்பு (சீ)

22) விலைஉயர் நகைகள் (ஜெ)
விதவித சேலைகள் (சீ)
பலதேவை என்றே (ஜெ)
படுத்தாதே தொந்தரை (சீ)

23) பதி வருமானம் (ஜெ)
பார்த்து நடப்பாய் (சீ)
அதி மகிழ்ச்சியுடன் (ஜெ)
அமைதியாய் வாழ்வாய் (சீ)

24) சாத்வீக மதக்கொள்கை (ஜெ)
சாதிக்கும் பதியுடன் (சீ)
ஆத்மிய முயற்சியில் (ஜெ)
ஆதரிப்பாய் நீ (சீ)

25) அருந்ததி போல (ஜெ)
அடைவாய் கற்பு (சீ)
ஒருமீரா ஆவாய் (ஜெ)
ஒளிறு பக்தியுடன் (சீ)

26) மாலைக் கிளப்புகளில் —ஜெய ஜெயராம்
டின்னர் பார்ட்டிகளில் சீதாராம்
காலையும் வைக்காதே (ஜெ)
கண்டபடி சிரிக்காதே (சீ)

27) ஆயாக்கள் வேண்டாம் (ஜெ)
அருமைப் பாலரை (சீ)
தாயாயிருந்து நீ (ஜெ)
தகையுடன் வளர்ப்பாய் (சீ)

28) எழுதல் படித்தல் (ஜெ)
எளிதாய்க் கணிதம் (சீ)
பழுதில் கல்வி (ஜெ)
பயிற்றுவாய் சரியே (சீ)

29) விருப்பு ராமாயணம் (ஜெ)
வீறு சங்கீர்த்தனம் (சீ)
சிறப்புடன் ஸ்தோத்திரம் (ஜெ)
ஸ்ரீ பாகவதம் (சீ)

30) தனி சம்ஸ்கிருதம் (ஜெ)
தர்ம கீதை (சீ)
கனிவுடன் போதிப்பாய் (ஜெ)
கருத்தொன்ருக (சீ)

31) பனுவல் பாரதம் (ஜெ)
பார்புகழ் பீஷ்மர் (சீ)
அனுமன் யுதிஷ்டிரர் (ஜெ)
அர்ச்சுனன் துருவன் (சீ)

32) பிரஹ்லாத ஞகியோர் (ஜெ)
பெருமை சரித்திரம் (சீ)
பரவு பக்தியுடன் (ஜெ)
பாலர்க்குப் போதி (சீ)

33) தூங்கு பிள்ளைகள் (ஜெ)
துயில் விழித்தெழுந்து (சீ)
நான்குமணி காலை (ஜெ)
நாமம் சொல்லட்டும் (சீ)

34) வேலைக்கா ரரையும் — ஜெய ஜெயராம்
விசுவாசம் கொண்டு — சீதாராம்
சீலக் கீர்த்தனையில் (ஜெ)
சேர்த்துக்கொள் இரவில் (சீ)

35) சீதாராம் என (ஜெ)
சமைக்கும் வேளையில் (சீ)
ராமேதசியாம் என (ஜெ)
ரமிப்பாய் ஜபிப்பாய் (சீ)

36) குடி ஜலந்தன்னை (ஜெ)
கோலக் கிணற்றில் (சீ)
எடுக்கும் போது (ஜெ)
இனிதாய் ஜபிப்பாய் (சீ)

37) இப்பக்தி சாதனை (ஜெ)
இறைவன் சிந்தனை (சீ)
எப்போதும் கொண்டால் (ஜெ)
தப்பாது மோக்ஷம் (சீ)

38) கெட்ட பிள்ளைகள் (ஜெ)
கிட்ட வராமல் (சீ)
திட்டமா யடக்கு (ஜெ)
சிறு பாலர்களை (சீ)

39) படித்தல் செய்தி (ஜெ)
பார்த்தல் சினிமா (சீ)
படித்தல் நாவல்கள் (ஜெ)
புகைத்தல் சிகரெட் (சீ)

40) தீய பழக்கங்கள் (ஜெ)
திடமாய் விடவே (சீ)
தூய பிள்ளைகள் (ஜெ)
துலக்குவா யுண்மை (சீ)

41) கட்டுக் கடங்கா (ஜெ)
துட்டப் பிள்ளைகள் (சீ)
பட்டினி போடு (ஜெ)
பகலிரவோர் நாள் (சீ)

42) நலமாய்ச் சிறுவர்க்கு —ஜெய ஜெயராம்
நன்னெறி புகட்டு —சீதாராம்.
இலக்ஷிய வாதிகள் (ஜெ)
இனிது வளருவார் (சீ)

43) வைகுண்ட மாக (ஜெ)
வண்ணக் கோவிலாய் (சீ)
செய்குவாய் வீட்டை (ஜெ)
உய்வாய் மகிழ்வுடன் (சீ)

44) நாத்திகம் முதிர்ந்த (ஜெ)
நாயக னுனும் (சீ)
ஆத்மீய பக்தனுய் (ஜெ)
ஆகி விடுவான் (சீ)

45) கீர்த்தனே புகட்டுவாய் (ஜெ)
கிருகக் குழந்தைகள் (சீ)
சேர்த்துக்கொள் ராத்திரி (ஜெ)
செய்யும் பஜனேயில் (சீ)

46) ஸ்ரீக்கிருஷ்ணன் படம் (ஜெ)
பூஜை அறைமாட்டு (சீ)
போக்கியம் அறையில் (ஜெ)
புரிவாய் கீர்த்தனே (சீ)

47) ஜெய சீதாராம்ஜெய (ஜெ)
ஜெய சீதாராம்ஜெய (சீ)
ஜயமெனப் பாடுவாய் (ஜெ)
சமையலின் போது (சீ)

48) பருக்காலேப் பால் (ஜெ)
பண்ணியபின் ஜபம் (சீ)
பெருமை வைராக்யம் (ஜெ)
பேணியே நிற்பாய் (சீ)

49) மதமற்ற வாழ்க்கை (ஜெ)
பாணமே உண்மையில் (சீ)
மதாசார வாழ்க்கை (ஜெ)
மார்க்கம் நித்யத்வம் (சீ)

## 3. மேல்நாட்டுப் பெண்களும், கீழ்நாட்டுப் பெண்களும்

மேல்நாட்டுப் பெண்மணி தன் வாழ்க்கையில் புதியதோர் அத்தியாயத்தைத் தொடங்கிவிட்டாள். தற்கால நாகரிகத்தின் வேகமும், விறுவிறுப்பும், வெறும் கூச்சலும் அவளைப் பிரமிக்கும்படி செய்து விட்டன. வீட்டுக்காரியங்களைச் செய்ய அவள் விரும்புகிறாளில்லை. அவளை நீங்கள் சட்ட சபையிலும், தட்டெழுத்துப் பொறியண்டையும் பார்க்கலாம். கப்பலோட்டியாகவோ, சினிமா நடிகையாகவோ, வர்த்தக நிலையத்தில் கணக்கெழுதுபவளாகவோ ஆகிவிடுகிறாள். அவள் செய்கிற வேலையைப்பற்றிப் பெருமை பாராட்டுகிறாள். ஆடவனின் வேலையைக் குறைத்தும், அதில் பங்கிட்டுக்கொள்வதுமான உபகாரம் செய்வதாக மெச்சிக்கொள்ளுகிறாள். படிப்படியாக, ஆடவனைப் போல அவள் காற்சட்டைகளை அணியவும் துணிந்து விட்டாள். ஆடவனுடைய துறையில் அவள் போட்டியிட்டு அவனை விலக்கி அவனுக்குப் பதிலாக உழைக்க முயற்சிக்கிறாள்.

அவள் தனது உரிமைகளை வற்புறுத்துகிறாள். தன் வீட்டின் நான்கு சுவர்களையும் உடைத்து விட்டாள். போர்முகங்களிலும், தொழிற்சாலைகளிலும் அவள் வேலை பார்த்து வருகிறாள். தான் ஓர் மஹத்தான வாழ்வை வாழுவதாகக் கருதுகிறாள். ஆனால் அது அப்படி அல்ல. உண்மையில் அவள் ஸாந்தியையும் சந்தோஷத்தையும் பெறவே இல்லை.

ஆடவர்கள் பெண்களின் வேலைகளைச் செய்ய முடியாது. அதுபோல, உலகத்தில், பெண்கள் ஆடவர்களுடைய வேலையைச் செய்ய முடியாது.

அரசியலில் ஈடுபடுவதாலும், அரசியல்அதிகாரத்தை செலுத்துவதாலும், சட்டம் பேசுவதாலும், பெண் மணிகள் அறிவு ஒளியும், பண்பாடும் அடைந்துவிட முடியாது. சம்பளம் வாங்கும் கூலியாட்களாய்ப் பெண்மணிகள் தம் வீட்டைக் கடந்து வெளியேறி னல், அதன் விளைவு அபாயகரமானது. குடும்பக் கட்டுப்பாடும், ஒழுங்கும் நிர்மூலமாகி குடும்பச் சமுதாய அழிவு ஏற்படும். கல்வி வாசனையில்லா மலும் கவனிக்கப்படாமலும் குழந்தைகள் சீரழிவார்கள்.

பெண்மையின் மென்மையும்சம்பிரதாயங்களும் மழுங்கிவிடும். அவள் ஆடவனுக்குப் பங்காளியல்ல; அன்பு நிறைந்த மனைவியும் அல்ல. அவள் அவனுடைய கூட்டு உழைப்பாளி அல்லது சரிசம மான வேலைக்காரி. கற்பு பெண்களுக்கென்றே அமைந்த முக்கியமான பண்பாடு; அது அவளுடைய குணத்தையும் ஒழுக்கத்தையும் பாதுகாக்கக்கூடிய மிக மேலான ரக்ஷை. கற்பைஅழிக்கவல்ல சூழ்நிலை களுக்கு அவள் இலக்காகிறாள்; விரைவிலே அவர்கள் சுதந்திரமடைகிறார்கள். இதனால் அவர்களுக்கு வெவ்வேறு விதமான தொந்தரவுகளும் சீர்கேடும் உண்டாகின்றன.

குடும்பக் கடமைகளை நிறைவேற்றல், வீட்டு நிர்வாகத்தை நடத்தல், குழந்தைகளைப் பராமரித்து வளர்த்தல், குடும்பச் சிக்கனத்தை அமைத்தல்— பெண்மணியின் தகுதிவாய்ந்த உத்தியோகம் இவையேயாம். ஏற்கனவே பெண்மணிக்குத் தெய்வீகச் சக்தி பொருந்தியுள்ளது. அன்பினாலும் பிரேமையினாலும் நிறைந்த தன்னுடைய சக்தியைக் கொண்டு உலகம் முழுவதையும் அவள் ஏற்கனவே அரசு செலுத்தி வருகிறாள். சட்டம் இயற்றுகிறவர் களாகவோ, அல்லது தலைவர்களாகவோ அல்லது அமைச்சர்களாகவோ அல்லது நீதிபதிகளாகவோ

செயல்படப் பிரயோகிக்கும் சக்தி ஒன்றுண்டு. பெண்மணிகள் தங்கள் குழந்தைகளை பழக்கிப் பெருந்தன்மையான நகரவாசிகளாக்குவதும் மனித சமுதாயத்திற்கே ஒழுக்கத்தையுடைய பண்பாடு அமைத்தலுமே மேற்கண்ட சக்தியைக் காட்டிலும் அதிகமான சக்திவாய்ந்தது.

இயற்கையில் செயல்படத்தக்க பெண்களின் துறை குடும்பமேயாகும். இக்குடும்பத்தில் பெண் தான் கணவனுக்கு மிக மிக உபயோகமாவாள். ஏனெனில் அவள் மிகவும் கணவனின் பிரியத்துக்குப் பாத்திரமாகிருள். எளிய வீட்டில் இருந்து கொண்டு, பெருந்தன்மையான அறிவாளிகளான தேசப்பற்றுடையவர்களையும், அரசியல் வாதிகளை யும், போர் வீரர்களையும், முனீஸ்வரர்களையும் உற்பத்தி பண்ணுவதில் மிக்க அபிமானம் படைத்தவளாயிருக்கக் கூடும்.

தன்னிடத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் ஆத்மீக உணர்ச்சியை சிவாஜி தனது மாதாவிட மிருந்து கிரஹித்துக் கொண்டான். அவனுடைய உண்மையான இரத்தம் அவன் நாடிகளின் வழியே ஓடி பிரமிக்கத்தக்க மாறுதலை உண்டு பண்ணியுள்ளது. அடிசன் (Addison) என்பவருடைய தாயார் அடிசன் கேட்ட முரண்பட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் அளித்தார். அவனுடைய உபாத்தியாயர்களால் பதிலளிக்கத் திறமை போதவில்லை. அமைதியும் இனிமையும் அன்பும் நிறைந்த வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள பெருந்தன்மையான வெற்றிகரமான மக்களாக உற்பத்தி செய்வதற்குக் காரணம் தாயினுடைய மிகச்சிறந்த பெருந்தன்மை என்ற கோட்பாடேயாகும்.

மேல் நாடுகளில் குழந்தைகள் சிசுசம்ரக்ஷணு சாலைகளிலும், தாய்சேய் நல விடுதிகளிலும் பிறந்து வளர்ந்து வருகின்றன. அவைகள் தங்கள் தாய்மார்

களால் தழுவி, ஆரோக்கியச் சத்தை ஊட்டும் மென்மையையும் வாஞ்சையையும் கூடிய சீராட்டுதல்கள் இன்னவை என்று அறிகிறதில்லை. அன்புள்ள தாயின் சுகமான அணைப்பில் தூங்குவது எப்படி என்பதை அவை அறியமாட்டா. கொடுக்கல் வாங்கல் எனும் வியாபாரத்திலும் சிக்கனத்திலும் வளரக்கூடிய இக்குழந்தைகள், வெள்ளி, பொன் நாணயங்களிடத்தில் ஓய்வில்லாத பக்தியைச் செலுத்தத் தங்கள் யௌவன காலத்தி லேயே மனத்தில் பதிவு செய்துகொள்கிறார்கள். இதன் விளைவாக, அவர்கள் வாழ்நாள் முழுதும் ஐசுவரிய தேவதையை தொழுகிறவர்களாய் விடுகிறார்கள்.

மேல்நாடுகளில் மக்கள் சமுதாயத்தில் சம்போக உணர்ச்சியே அபரிமிதமாய்க் காணப் படுகிறது. அங்கே அதிபால்ய விவாகங்கள் மிகவும் அரிது. ஆனால் அதிபால்ய சம்போகத்திற்கு இடங் கொடுக்கும் நிலை அரிதல்ல. மேனாட்டு தத்துவ ஞானிகள், விவாகத்திற்கு முன் ஆண் பெண் கூட்டுறவுக்கு இடமளித்தலை அனுமதிக்கிறார்கள். இதற்கு அவர்கள் சிபார்சு செய்கிறார்கள். இத்தகைய ஆண் பெண் கூட்டுறவுகள் மேல்நாடு களில் சர்வசாதாரணம். டென்மார்க் தேசத்திலே, சட்டபூர்வமாய் அங்கீகரிக்கப்படுவதற்கு முன்பேயே அநேக இளஞ்சிறுமிகள் கர்ப்பந்தரித்துவிடுகிறார்கள். ஆடவர் பெண்டிர் தங்கள் வாழ்க்கை ஒப்பந்தத்தை வெகுவெகு எளிதாக நடத்திக்கொள்கிறார்கள். பாதிவழி அனுபவங்கள் பயங்கரமான விளைவுகளை உண்டாக்குகின்றன. தம்பதிகளிடையில் உண்மை யான காதல் இருக்குமென்பதில்லை. விவாகமென்பது வியாபார ஒப்பந்தமேயன்றி, வைதிக சம்ஸ்காரம் அல்ல. ஆனபடியால்தான், எண்ணிறந்த விவாக ரத்துக்கள் ஏற்படுகின்றன.

ஜெர்மனி, ஜப்பான் முதலிய தேசங்களில் பெண்கள் இவ்வளவு எண்ணிக்கையுள்ள குழந்தைகளை இராணுவத்திற்கு அளித்துவிட வேண்டும் என்று திட்டம். அவ்விதம் அளிக்காத விஷயத்தில் அவர்களுக்கு தண்டத்தீர்வை போடுகிறார்கள். என்ன ஆச்சரியமான விஷயம்! மிகவும் வியப்பிற்குரியது! ஓர் பெண்மணியின் தேசாபிமானம் வலுத்துப் போய் அசாதாரண வழியில் செல்லுகிறது. இந்த தேசங்களிலே, இராஜாங்கம்தான் பிரதான ஸ்தானம் வகிக்கிறது; பிரஜையோ கடைசி. உண்மையான சுதந்திரமென்பதே அவளுக்குக் கிடையாது. கடமையால் கட்டுண்ட அடிமையே தான் அவள்.

ஓர் பெண்மணிக்குள்ள மிக்க உயர்வான நிலை தாய்மை என்கிற கோட்பாடே. இதை இந்தியா அங்கீகரித்துள்ளது. இறைவனுடைய தாய்மையே காளிகாதேவியாகவும் இதர தேவதைகளாகவும் நாம் வழிபடுகிறோம். இதெல்லாம் வீண் அல்ல. நமது சொந்த தேசத்தை நாம் ''மாத்ரு பூமி'' என்று அழைக்கிறோம்.

மேனாடுகளில் ஸ்திரீ சுதந்திரம் என்பதுபற்றி பெருமை பாராட்டிப் பேசுகிறார்கள். அவளை நெருங்கிச் சோதனை செய்து பார்த்தால், ஆசைகளுக்கும், நாகரிகங்களுக்கும், டாலர் என்ற நாணயத்திற்குமே அடிமையாயிருக்கிறாள் என்பதை நீங்கள் கண்டுகொள்வீர்கள். நமது வேத காலத்தில், பெண்மணிகௌரவம் வாய்ந்த, உயர்ந்த பதவியில் திளைத்துக்கொண்டிருந்தாள். இப்போதும், அவள் ஓர் உன்னத நிலை வகிக்கிறாள். வீட்டில் அவள் யஜமாட்டி, அவள் தாய். திருமணத்தின் குறிக்கோள் தம்பதிகளின் பரஸ்பரமான சந்தோஷமும், குழந்தைபேறும், தெய்வங்களைச் சேவித்துச்

செய்யும் சேவையும் ஆகும். எங்கு வேண்டுமானாலும் செல்லக்கூடிய பூரணமான சுதந்திரத்தை அனுபவித்தாள். வித்தியார்த்தியாகவும், உபாத்தியாயினியாகவும், இலக்கிய அரசியாகவும் மிக உயர்ந்த பதவி வகித்தாள். வீர சரித்திர காலத்திலோ, (இதிகாச காலத்திலோ) பெண் மணிக்கு எல்லாச் சுதந்திரங்களும் பரிபூரண நிலை அடைந்தன. மேனாட்டில் தற்காலப் பெண்மணி வீர விசித்திரத்தை விரும்புகிறாள்; ஆனால் அவள் ஒவ்வொன்றையும் கானல் நீரெனக் கண்டு கொள்கிறாள். ஆனால் திரௌபதியும், சுபத்திரையும், வேறு பல பெண்மணிகளும் வீர விசித்திர வாழ்க்கையை நடத்தினார்கள். அதன் ஸத்தைக் கிரகித்துக் கொண்டார்கள். அக்காலத்தில், பெண்மணியின் நிலை மிக்க உயர்ந்த ஸ்தானத்தை வகித்தது.

பகற்பொழுதில் வெட்ட வெளிச்சத்தில் முன்னணியில் நிற்பது ஓர் பெண்மணியின் உண்மையான பெருமைக்குச் சோதனை அல்லது பிரமாணம் அல்ல. சிற்றின்ப சுகத்தை நாடி அலைவதிலோ, தனக்கென அமைந்த இயற்கையான கடமைகளை மறந்தவளாய் ஆடவனின் துறையில் அவனுக்குப் போட்டியாகச் சண்டை போடுவதிலோ ஓர் பெண் சந்தோஷம் பெறவே மாட்டாள். ஆனால் பெண்மைக்கு மணிமகுடம் தரித்த மஹிமை என விளங்கும் வேத, இதிகாச இலக்ஷியம் வாய்ந்த வாழ்க்கையை நடத்துவதில்தான் அவள் சந்தோஷம் பெறக்கூடும். அப்போதுதான், பெண், ஒவ்வொரு இந்தியனாலும் இப்போது பாவிக்கப்பட்டுவரும் சர்வசாதாரணமான தாய் என்ற பூர்வீகஅந்தஸ்தை திரும்பப் பெறுவாள்.

மேனாடுகளில், உலக சுதந்திரத்தை நாடி நிற்கின்ற பெண்களும், நிறம் அல்லது சமயக்கோட்பாடு பற்றிய கட்டுப்பாடுகளை அறியாத நாரீமணிகளும், அன்பு, ஒற்றுமை, சர்வ வியாபகமான சகோதரத்துவம் ஆகியவைகளால் நிறைந்ததோர் மதத்தைத் தழுவுகிறமாதர்களும் கணக்கற்றவர்கள். ஆனால் எல்லாவற்றுக்கும் மேனாட்டுப் பெண்ணின் கோட்பாடு நம்முடையதாக இருக்கலாகாது. ஏனெனில், நாம் இயற்கைக்கு மாறாக நடந்து கொள்பவர்களாவோம். அன்றியும் தேசத்துரோகிகளாக நடந்து கொள்பவர்களாவோம். சந்தோஷத்திற்குக் கபடமற்ற ஆனால் தப்புவழி காட்டுகிற பாதை இது. மேனாட்டுப் பெண்ணைப்பின்பற்றினால், நமது பாதை அபாயங்கள் பலவற்றால் சூழ்ந்துவிடும். இப்போது ஊசியால் குத்திக்கிழித்து விடலாம்; அப்பாலோ ஒரு யானையாலுங்கூட நிறுத்த முடியாது. ஒருதேச மக்கள் மற்ற தேசத்து மக்களின் கோட்பாட்டையோ, சமுதாய பழக்க வழக்கங்களையோ, தங்கள் தேசத்தின் அசையாத அஸ்திவாரத்தை வீழ்த்தாமல் ஏற்றுக்கொள்ள முடியாது.

## 4. ருது தர்மம்

பராசரஸ்மிருதியை இயற்றிய ஸ்ரீபாரசர மஹரிஷிக்கும், யாக்ஞவல்கிய மஹரிஷிக்கும், மனுஸ்மிருதி இயற்றிய ஸ்ரீமனு என்ற கியாதி வாய்ந்த ஆசிரியருக்கும் வந்தனம் செலுத்துகிறோம். இவர்கள் தான் ஸ்திரி புருஷர்கள் நடந்து கொள்ளவேண்டிய ஒழுக்க விதிகளை வகுத்து எழுதியவர்கள்.

இயற்கையின் நியதிகள் குற்றமற்றவையாயும் யாவருக்கும் ஒத்துக் கொள்ளக் கூடியவையாயும் இருக்கின்றன. பண்டை காலத்து மக்கள் வாழ்க்கை இந்த நியதிகளை அடிப்படையாகக் கொண்டது.

நமது முன்னோர்கள் அவற்றை அனுஷ்டித்து மகிழ்ச்சியடைந்தார்கள். அவர்களுக்கு ஒரு போதும் வியாதியே வந்ததில்லை. பழங்கால வாழ்க்கைநிலை எவ்வளவு அழகானது. சாஸ்திரீயமாக, கன்னிகாதானம் ஒரு பெண்ணின் ருது காலத்திற்குமுன் நிகழ்ந்தது. இதுவே உண்மையில் மஹத்தான யக்ஞம் ஆகிறது. மணப்பெண்ணை கலியாணமான ஓரிரண்டு வருஷங்களுக்குப் பிறகு மணமகன் வீட்டிற்கு அனுப்பி வைப்பதும் மிகுந்த பயன்தரத்தக்க செயலாகும். மணமகன், மணமகள் ஆகியோருடைய உடல் வளர்ச்சிக்கும், ஜீவாதாரமான சுக்கில-சுரோணித பக்குவத்திற்கும் இந்த இடைக்காலம் பெரிதும் துணை புரிந்தது.

இயற்கையின் சட்டம் எவ்வளவு சிறந்தது. ருதுவாதல் என்னும் அம்சம் பெண்ணுக்கு அமைந்திருக்கிறது. ஆண், பெண் ஆகிய இருபாலருடைய வாழ்க்கைகளும் இதைத் தழுவியே உருவாகின்றன. ருதுவுக்கு முன் ஒரு பெண் கன்னிகாதேவி என ஆடவர்களால் மதிக்கப்படுகிருள். விவாஹத்திற்கு பிறகுகூட அவள் பருவமெய்தும்வரை கன்னியாகவே இருந்துவருகிருள். ருதுவாகி பக்குவமடைந்த பிறகு அவளை ஸ்திரீ என்று அழைக்கிறோம். குடும்பத்தில் வெகுசீக்கிரம் ஒரு பேரப்பிள்ளையை கண்டு களிக்க வேண்டும் என்ற தாயின் ஆசையைப் பூர்த்திப் பண்ணிக் கொள்வதற்காக மட்டும் ருதுவாகாத பெண்ணையும் பக்குவமடையாத ஆண் பையனையும் தாம்பத்திய வாழ்க்கையில் புகவிடுவதைத் தடுக்கவேண்டுமென்று நான் ஒவ்வொரு மாதா பிதாக்களையும் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். பயங்கரமான தோர் அழிவுக்கு இது மூலகாரணமாகிறது. இது நம்மை கீழ்த்தர இயல்புகளில் வீழ்த்தி நமது வாழ்க்கைகளை நாசப்படுத்துகின்றது. குழந்தைகளின் வாழ்க்கை

பெற்றேரைச்சார்ந்தது. ''சுக்கில நஷ்டமானது அகால மரணத்திற்கு அடிகோலுகிறது. வீரியத்தைப் பாதுகாக்குமளவு ஆயுள் நீடிக்கிறது'' என்பது சாஸ்திரங்களின் கோட்பாடு.

இந்தியாவில் பெண்கள் பருவமடையும் காலம் பன்னிரெண்டாவது வயது முதல் பதினைந்தாவது வயது வரை வித்தியாசப்படுகிறது. ருதுப்போக்கு ஸ்திரீகளுக்கு சுமார் ஐம்பதாவது வயதில் நின்று விடுகிறது. ஹிந்து தர்ம சாஸ்திரங்களின் பிரகாரம் ஓர் ஸ்திரீ ருது காலத்தில் தன் கணவனுடன் தாம்பத்ய வாழ்க்கையில் ஈடுபடுவதிலிருந்து கண்டிப்புடன் தடுக்கப்படுகிருள். அவள் குளிக்க லாகாது. அவள் ஓடவோ, அல்லது உரக்க பேசவோ கூடாது. நகங்களை எடுத்தல் கூடாது. புல்தரையில் படுத்துக்கொள்ள வேண்டும். உடம்பில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளவோ, சந்தனம் பூசிக் கொள்ளவோ கூடாது. குளிர்ந்த பானங்களை குடிக்கலாகாது. இந்த விதிகளைப் புறக்கணித்தாலோ சந்ததியைப் பாதிக்கிறது. ருதுகாலத்தில் அவள் அழுதால், அவளுக்கு பிறக்கும் குழந்தைக்கு கண்நோய் வருகிறது. பகலில் அவள் உறங்கு வாளானல், குழந்தை மந்தபுத்தியுள்ளவனுகிருன்.

கர்ப்பாதானம் அல்லது கருவடைதல் காலமாதல் ருது தோற்றத்திலிருந்து முதலாவது பதினறு நாட்கள்தான். முதலாவது நான்கு நாட்கள் தள்ளக்கூடியவை. மிகவும் சிரேஷ்டமான காலம் ஐந்தாவது நாள் முதல் பதினறாவது நாள் பரியந்தமேயாகும். அஸ்தமன காலத்திலோ, சூரியோதயத்திலோ சேர்க்கையில் ஈடுபடக்கூடாது. மாதாந்திரத் தீட்டுக் காலத்தில் முதல் நான்கு நாட்களில் சேர்க்கை தடுக்கப்பட வேண்டும். அஷ்டமி, சதுர்தசி, அமாவாசை, பௌர்ணமி, மாதாப் பிதாக்களின் திவச நாட்கள், அவற்றிற்கு

முந்திய தினங்கள், 17-வது வியதிபாதயோகம், 27-வது வைதிருதியோகம், மாத சங்கிராந்தி தினம், கிரஹணம் - இக்காலங்களில் ஆண்பெண் உறவுதனை அறவே அகற்றவும். என்றும் பகற் காலத்திலோ, நடு இரவிலோ சேர்க்கை வைத்துக் கொள்ளக்கூடாது. பசிதாகமுள்ளவர்கள், மலஜல அவஸ்தையால் தாக்கப்பட்டவர்கள், வயிறு புடைக்கக் கனமான உணவு உண்டவர்கள் புணர்ச்சியில் புகலாகாது.

பகலில் பாரியையை ஒருபோதும் நெருங்க லாகாது. ''பகலும் இரவும் பிரஜாபதி; பகல் சைதன்யம்; இரவு ஜடம். பகலில் புணருபவர்கள் சைதன்யத்தை (அறிவு) வீணாக்குகிறார்கள். ஆனால் இரவில் காமத்தில் கூடுதலே முறையானது'' - (பிரஸ்ன உபநிஷதம் 1-13).

முதலாவது நான்கு நாட்களையும் ஒற்றைப் படையான எல்லா நாட்களையும் வர்ஜித்தால் 6, 8, 10, 12, 14, 16வது நாட்களாகிய ஆறு இரட்டைப் படையான நாட்கள் தான் எஞ்சுகிறது. சதுர்த்தசி, அஷ்டமி முதலிய நாட்கள் போனால் தாம்பத்ய வாழ்க்கையில் ஈடுபடுவதற்கு மொத்தத்தில் பொதுவாக இரண்டு இரவுகள் தான் அனுமதிக்கப் படுகின்றன.

ஸ்திரீ தன் சிரசைக் கணவனின் பாதத்தில் வைத்து, அவனை ஓர் தெய்வமாக பாவித்து வணங்குவதின்றி, குடும்பத்தில் பேரும் பிரக்யாதியும் பெற்றுள்ள சிரேஷ்டர்களின் பெயர் களையோ, கீர்த்தி வாய்ந்த ரிஷியின் பெயரையோ, அல்லது புனிதமான மஹானின் பெயரையோ ஞாபகத்தில் இருத்திக்கொள்ள வேண்டும். கணவன் ஆண்டவனை மறக்காமல் வழிபட்டு நல்லதோர் புத்திரனை நல்குமாறு பிரார்த்திக்க

வேண்டும். அவன் தன் வலது நாசியில் சுவாசம் சஞ்சரிக்குங்காலையில் (பிங்கலையில்) தன் மனைவியுடன் கூட வேண்டும். சம்போகம் முடிந்த பிறகு குளிப்பது நல்லது. அல்லது கைகால் முதலிய அவயவங்களை சுத்தி செய்துகொள்வது நலம். வெல்லப் பாகுடன் உணவும் பாலும் உட்கொண்ட பிறகு ஜன்னல் கதவுகளைத் திறந்து விட்டு படுத்துக் கொள்ளவேண்டும். விளக்குகள் மனைவியால் அணைக்கப்பட வேண்டும். அவன் தனித்தோர் படுக்கையில் உறங்க வேண்டும். வடக்கே தலை வைத்து ஒருவன் படுக்கலாகாது; தெற்கே தலைவைத்துப் படுத்தால் ஆயுள் நீடிக்கிறது.

சிசு உற்பத்திக்குரிய காலத்தில் ஏற்பட்ட சம்போகத்தின் மூலம் கருப்பையில் தங்கிய கரு தண்ணீர் போலிருக்கும் முதல் நாளிரவிலே. பின், ஏழு இரவுகளில் அது நீர்க்குமிழி போன்று இருக்கும். அரைமாதத்திற்குப் பிறகு அது உருண்டையாய் விடும். ஒரு மாதத்திற்குப்பின் அது கடினமாகும். இரண்டு மாதங்களில் தலை உருவாகும். மூன்று மாதங்களில் கால் உற்பத்தியாகும். நான்காவது மாதத்திலே, வயறு, இடுப்பு, கணைக்கால் முதலிய உறுப்புகள் வடிவமாகின்றன. ஐந்தாவது மாதத்தில் முதுகெலும்பு உருவாகிறது. ஆறுவது மாதத்தில் கருவில் வளரும் சிசுவுக்கு கண்கள், செவிகள், மூக்கு, முகம் இவை தோன்றுகின்றன. ஏழாவது மாதத்தில் ஆத்மா அந்த சரீரத்தில் வந்து புகுந்துவிடுகிறது. எட்டாவது மாதத்தில் அங்கங்கள் அனைத்தும் பூரண வளர்ச்சியடைகின்றன. ஒன்பதாவது மாதத்தில் புஷ்டி அடைகின்றது. தாயின் உணவும் நீரும் அவளுடைய நாடிகளின் மூலமாக குழந்தைக்குப் பிராணனை ஊட்டி வளர்க்கின்றன. ஒன்பதாவது மாதத்தில் எல்லாக் குணசம்பத்துக்கள் அமைகின்றன.

கடவுள் மிகவும் நல்ல இயற்கையான நியதிகளைச் செய்துள்ளார். ஸ்திரீ ஒருத்தி கர்ப்பவதியானதும், மாதாந்திரத் தீட்டு நின்றுவிடுகிறது என்பதை எல்லோரும் அறிவார்கள். மாதாந்திரத் தீட்டு நின்ற அக்காலத்தில் அவளுடன் சம்பந்தம் வைத்துக்கொள்வதால் பயன் இல்லை. அப்படிச் செய்வதால், அவளுக்கு ஆயுள்காலம் குறைந்து க்ஷீணிக்கும்.

சிசு பிறந்த பிறகு, அவள் முன் போல் ஆரோக்கியம் பெறும் வரையில் மாதத் தீட்டு ஏற்படாது. இக்காலத்தில்கூட அவளுடன் சம்பந்தம் வர்ஜிக்கப்படுகிறது. அவளை ''பிரசூதி'' என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. சிசு பிறந்தபின் அவள் ஜாக்கிரதையாய்த் தனி விடுதியில் இருந்துவர வேண்டும். இந்த விஷயத்திலும் கடவுள் நல்லதோர் நியதியைச் சிருஷ்டித்திருக்கிறார்.

நம்முடைய முன்னோர்கள் பலசாலிகளாயும், தீரர்களாயும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களாயும் இருந்தார்களென்று சரித்திரம் சான்று பேசுகிறது. அதற்கு முரணாக, இந்த நியதிகளை மீறினபடியால் தற்காலக் குழந்தைகள் பலவீனமும் மந்த புத்தியும் கொண்டு, அற்பாயுள் உள்ளவையாயிருக்கின்றன. ''கணவனும் மனைவியும் எவ்வளவுக்கெவ்வளவு இன்ப நுகர்ச்சி, உணவு, செயல்கள் ஆகியவைகளில் ஒன்றுபட்டு ஒருமித்து வாழ்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்குப் பிறக்கும் குழந்தையும் அப்படியப்படியே உருவாகும்'' என்று அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

மனிதனுக்குச் சுக்கிலம் — பெண்களுக்குச் சுரோணிதம். ஒவ்வொன்றும் தனித்தனியே பலமற்றது. சம்போக காலத்தில் தகப்பனாரின்

சுக்கிலம் வலுப்படுகிறபோது, ஆண் சிசு உற்பத்தி யாகும்; சுரோணிதம் ஆதிக்கம் பெற்ருல், பிறப்பது பெண் சிசு. இரண்டும் சமபலமாளுல் அலி பிறக்கும். புணர்ச்சியினின்று அதிகரித்த இன்பத்தை ஆண்களைக் காட்டிலும் பெண்கள் பெறுகிறபடியால், பெண்கள்தான் எண்ணிக்கையில் அதிகமாய்ப் பிறக்கிருர்கள். ஒவ்வொரு செய்கை யும் மனத்தில் உருவாகிப் பிறகு வெளிப்படுகிறது. ஆகையால், பிறக்கிற குழந்தை தன் பெற்ருேர் களின் எண்ணத்தைத் தழுவியே செயல்படும்.

தாம்பத்ய உறவில், அலட்டிக்கொள்ளும் உள்ளத்துடன் ஈடுபட்டால், அவர்களுக்குப் பிறக்கும் சிசு குருடு, நொண்டி, கூனி, குள்ளன் அல்லது அங்கஹீனம் உள்ளதாயிருக்கும். சூரிய சந்திரக் கிரஹணங்களில் கருத்தரித்தாலோ அங்கஹீனமான குழந்தைகளே பிறக்கின்றன. வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வுடன் பெற்ருேர்களின் உடலமைப்புக்கு ஒத்தோ, மாறுபட்டோ குழந்தையின் உடல் அமைவதெல்லாம் சம்போக காலம், இடம், செயல், தத்துவம், இன்ப நுகர்ச்சி. ஆகியவைகளைப் பொறுத்ததாகும். கண்ணுடி ஒரு பொருளின் உண்மையான வடிவத்தைப் பிரதி பிம்பிப்பது போலவே, மனமொத்து நிறைவேறிய சம்போகத்தினின்று தகப்பனைப் போலவே பிறக்கிற குழந்தைக்கு அவனுடைய குணுதிசயங்களும் வந்து அமைகின்றன. சுக்கில சுரோணித வாயுக்களின் தாக்குதலிஞல் சுக்கிலம் இரு பிரிவாகத் தெறித் தால், ஒரே பாலான இரட்டைக் குழந்தைகள் உற்பவிக்கும். இங்ஙனமே தம்பதிகளின் சுக்கில சுரோணிதங்கள் இரு பிரிவாகத் தெறித்தால் ஆண், பெண் ஆகிய இரட்டைக் குழந்தைகள் பிறக்கும்.

சுக்கிலம் அதிக அளவில் இருக்கும்போது ஆண் சிசுவும், சுரோணிதம் அதிகப்படும்போது பெண்

சிசுவும் பிறக்கும். இரண்டும் சம அளவானால், ஸ்திரீ புருஷ லக்ஷணங்களிரண்டும் பொருந்திய ஆண் அல்லது பெண் சிசுவாகப் பிறக்கும். இரண்டும் பலவீனமானால், அளவில் குறைந்தால், கர்ப்பமே தரிக்காது - (மனுதர்ம சாஸ்திரம் III-49)

சுக்கிலம் சுரோணிதத்துடன் கலக்கிறது. சுக்கிலமானது பெண்ணின் சுரோணிதத்திலுள்ள முட்டை போன்ற சினைக் கோளங்களைச் செழிக்கப் பண்ணி கரு உற்பத்தி செய்கிறது. ஸ்திரீ ருதுவான நாள் முதல் 6, 8, 10, 12-வது நாள் ஆகிய இரட்டைப் படையான நாட்களில் கருதரித்தால், அந்த ஸ்திரீக்கு ஆண் குழந்தை பிறக்கும். ஒற்றைப் படையான நாட்களிலோவென்றால், பெண்தான் பிறக்கும்.

சில அங்க அடையாளங்களைக் கொண்டு, கருப்பையிலுள்ள சிசு ஆணா பெண்ணாவென்று கண்டுபிடித்துக்கொள்ளலாம். ஆண் சிசுவானால் கருப்பையின்வடிவம்உருண்டையாயிருக்கும். இடது மார்பைவிட வலது மார்பில் பால் சுரக்க ஆரம்பிக்கும். வலது தொடை கொழுத்துக் காணப்படும். இடது கண்ணைக் காட்டிலும் வலது கண் சற்றுப் பருத்துத் தோன்றும். முகத்தில் ஓர் தெளிவும் உற்சாகமும் தென்படும். பெண் சிசுவானால் கருப்பை காலியாகத் தென்படும். வலது மார்பைவிட இடது மார்பில் பால் சுரக்க ஆரம்பிக்கும். இடது தொடை கொழுத்துக் காணப்படும். வலது கண்ணைக் காட்டிலும் இடது கண் சற்றுப் பருத்துத் தோன்றும்.

யானை குதிரை மேலேறி ஓர் கர்ப்பிணி சவாரி செய்யலாகாது. உயரமான மெத்தைப் படிகளையோ மலையையோ அவள் ஏறக்கூடாது. தீவிரமான தேகப்பயிற்சிகளை நீக்கவேண்டும். நீந்துதல்,

ஓடுதல், விரைவாக நடத்தல், வண்டியை ஓட்டிச் செல்லல், பகலில் தூங்கி இரவில் கண் விழித்தல்—இவைகள் யாவும் அவள் விட்டுவிட வேண்டும். சாயங்காலம் அந்தி வேளையில் அவள் உணவு கொள்ளலாகாது. சண்டை போடலாகாது, உடம்பை வளைத்து சோம்பல் முறிக்கலாகாது, அவள் மிதமிஞ்சி சிரிக்கலாகாது. எப்போதும் கர்ப்பிணி உற்சாகமாயும் அமைதியாயும் இருத்தல் வேண்டும். அவள் தன் கணவனின் நலத்திலே கண்ணுங் கருத்துமாய் இருக்க வேண்டும். தருமம் செய்யவேண்டும். இத்தகைய பெண்களுக்குப் பிறக்கும் ஆண் சிசு நற்குண நல்லொழுக்கமும், புத்தி சாதுர்யமும் பெற்று நீண்ட ஆயுளுடன் வாழும். இல்லாவிடிலோ, கருச்சிதைவுக்குரிய அபாயம் காணும்.

ஸ்தூல சரீரத்தை விட்டெழுந்த ஜீவன் மோக்ஷத்திற்குப் போய், செய்த கர்மவினைகளின் பலன்கள் யாவும் தீர்ந்த பிறகு, மீண்டும் பூமிக்கு வருகிறது. அது மழை நீரின் வழியாகத் தானியங் களில் போய்க் கலந்துவிடுகிறது. அந்த தானியங் களை உபயோகிக்கிற மனிதனுடைய சுக்கிலத்தில் நுழைகிறது. சுக்கிலத்துடன் அந்த ஜீவன் கருப் பையில் புகுகின்றது. மனிதன் தன் தாயின் கருப் பையிலுள்ளதோர் சிற்றறையில் இரத்தத்தின் ஓர் பகுதியாகத் தன் வாழ்க்கையைத் தொடங்குகிறான். அவளுடைய ரத்தத்தையும் மாமிசத்தையும் தின்றே அவன் உயிர் வாழுகிறான்.

ஹிந்து தத்வார்த்த விளக்கத்தின் பிரகாரம், ஆத்மா ஏழாவது மாதத்தில் கருவில் போய்ச் சேருகிறது. ஆறுவது மாதத்தில் சுவாசப் போக்கு வரத்து நிகழுகிறது. சிசு தாய்க் கர்ப்பத்தில் வாசம் பண்ணும் பொழுது, பூர்வீக ஜன்மங்களில் நடந்தவை யாவும் ஒன்றன் பின்னொன்றாக அதன்

ஞானதிருஷ்டியில் தோன்றுகின்றன. வைஷ்ணவி வாயுவினோடு சம்மந்தப்படுகிறபோது பூர்வ ஜன்ம நிகழ்ச்சிகளை நினைவுக்குக் கொண்டுவரவோ, ஞான திருஷ்டியில் வெகு தொலைவில் நிகழ்பவைகளைக் காணவோ முடியாமற் போகிறது.

மனத்தையும் புலன்களையும் அடக்கியாளுகின்ற கட்டுப்பாடான, நல்லொழுக்கமானதோர் வாழ்க்கையை நீங்கள் எல்லோரும் நடத்துவீர்களாக. இன்பமும் சுபிட்சமும் கொழிக்கின்ற நல்வாழ்வுக்கேதுவான ஸ்மிருதிகளின் நியதிகளை நீங்கள் எல்லோரும் அனுஷ்டிப்பீர்களாக.

## 5. ஆடவரைப்போல் பெண்டிரும் திறமைசாலிகள்.

துன்பத்தில் உம்மைச் சந்தோஷப்படுத்தி உற்சாகமூட்டக்கூடியவள் ஓர் பெண்மணி ஆவாள். கஷ்டங்கள் கவலைகள் அனைத்தும் பொறுமையுடன் அவள் சகித்துக்கொள்கிறாள். கவலை உம்மைத் தாக்குகிறபோது, உமது கண்ணீரைத் துடைக்கிறாள். எவ்வளவு பொறுமையுடனும் சகிக்குந் தன்மையுடனும் அவள் விளங்குகிறாள்! குழந்தைகளைப் போஷிப்பதில் பல ராத்திரி கண் விழித்துக் கவனஞ் செலுத்துகிறாள். சிசுவைப் பெறும்போது அவள் படுகிற வேதனை எவ்வளவு? அதை வளர்ப்பதில் எவ்வளவு துன்பம்? தன் கணவனுக்குக் கீழ்ப்படிந்து ஒழுகுவதில் அவள் எவ்வளவோ கஷ்டங்கள் படுகிறாள்! இதை நீங்கள் எப்போதாவது ஆழ்ந்து சிந்தித்தீர்களா? அன்பர்களே! பெண்டிர் இல்லாமல் உமது வாழ்க்கையின் தொடக்கம் ஆதரவற்றிருக்கும், வாழ்க்கையின் நடுப்பகுதியோ மகிழ்ச்சியற்றிருக்கும், அந்தியகாலமோ ஆறுதலற்றிருக்கும்.

உமது உயிரே அவளது சுவாசத்தில் இருந்தது. முதன் முதலில் நீர் பிதற்றிய சிறு வார்த்தைகள் அவளுடைய உதடுகளிலிருந்து கற்பிக்கப்பட்டன. உமக்கு முதலாவதாக அமைந்த உபாத்தியாயரும் குருவும் அவளேதான். முதன் முதலாக நீர் அழும் போது வழிந்த கண்ணீரை அவளல்லவா துடைத் தவள்! ஆடவர்கள் உம்மைக் கவனிக்காமல் கை விட்ட கடைசி காலத்தில், அவளன்றோ உமது கடைசி விம்மல்களையும் கடைசி மூச்சையும் கவலை யோடும் இமைகொட்டாமலும் கவனித்துக்கொண் டிருக்கிறாள்! பெண் வேகமாய்க் கிரகித்துக் கொள்கிறாள். சுயத்தியாகம் என்பது ஆடவரிடத்தி லிருப்பதைக் காட்டிலும் பெண்களிடமே அதிகம். தங்களை அலங்கரித்துக் கொள்வதிலும், ஆடை உடை அணிவதிலும், ஆடம்பரமாய் விளங்கு வதிலும் அவர்களுக்கு அத்தியந்த மோஹம்.

தங்கள் அறிவுத் திறமை, கல்வி, தைரியம், தேகபலம் ஆகியவற்றினால் ஆடவர்கள் அஹங்காரங் கொள்வதைப்போல, மேனியழகு, ஒய்யாரம், மிருதுத்தன்மை, இனிமை, கம்பீரம், நேர்த்தியாக இருத்தல், ஆடம்பரம், பகட்டு ஆகியவற்றினால் பெண்டிரும் அகங்காரங்கொள்ளுகிறார்கள். உணர்ச்சி அதிகம் மேலோங்கினால், அதற்குப் பெண்டிர் வசப்பட்டு, மாற்றிக்கொள்ள முடியாத அளவு கவலைப்படுகிறார்கள். ஆகையால் அவர்கள் சபலசித்தம் படைத்தவர்களென்று கூறப்படுகிறார் கள். ஆங்கிலக்கவி, ஷேக்ஸ்பியர் என்பார் "மனத் தளர்ச்சி-உன் பெயர் பெண்" என்று கூறியுள்ளார். சிறு குழந்தைபோலும், சேஷ்டை பொருந்தி யவளாயும், குறுகிய நோக்கு படைத்தவளாயும் ஓர் பெண் விளங்குகிறாள். வழக்காடுதல், தீர்க்காலோசனை செய்தல் முதலிய திறமைகள் அவளிடத்தில் பலஹீனம் பெறுகின்றன. ஆனால்,

தீர்ப்பளித்தலில் பக்ஷபாதமே அற்றவள். கபடமும், மாய்மாலமும் பெண்டிரோடு உடன்பிறந்த குணங்கள் ஆகும். உண்மையிலே, பெண்ணினுடைய மனதின் ஆழத்தைக் காணமுடியாது. **மனு** கூறுவதுபோல, ''பெண்ணின் மனமும், ஆடவனின் விதியும் தேவர்களால்கூட அறிந்துகொள்ள முடியாது. அப்படியானுல், ஆடவன் எப்படி அவளைப் புரிந்துகொள்ளுவது?'' இயற்கையில் பலவீனமுள்ளவர்களாதலால், பெண்கள் தங்கள் குறிக்கோளைப் பெறுவதற்கு மாய்மாலத்தையும் தந்திரத்தையும் கையாளவேண்டியிருக்கிறது. யானைகளுக்குத் தந்தமும், காளைமாடுகளுக்குக் கொம்புகளும், சிங்கம் புலிகளுக்கு வளைந்த நகங்களும் பற்களும் உயிரைப் பாதுகாத்துக் கொள்வதற்குப் பயன்படுகின்றன. அதுபோல, இயற்கைத்தாய் பெண்டிர்களுக்குத் தங்களை அபாயங்களினின்று தடுத்துக்கொள்வதற்கும் சரீரத்தைப் பாதுகாத்துக்கொள்வதற்கும் மாய்மாலம், கபடம் ஆகிய விசேஷ குணங்களை அளித்துள்ளார். தங்கள் இஷ்டத்தைப் பெறுவதற்கும் தங்களைப் பாதுகாத்துக்கொள்வதற்கும் கபடமும் கண்ணீரும் நம்பத்தக்க வகையில் பயன்படுகின்றன. இதுதான் அவர்களுக்குப் பக்கபலம். இவற்றினுல் அவர்கள் ஆடவரை ஆட்டி அதிகாரம் செலுத்துகிருர்கள். பெண்களுக்குத் தந்திரமும், மாய்மாலமும் இயற்கையாயமைந்தபடியால், இக்குணங்களுக்கு இடையருத் துணைகளான பொய் பேசுதல், நம்பிக்கைத் துரோகம், நன்றிமறத்தல், கொடுமை முதலிய இயல்புகளும் கூடவே இருக்கின்றன. பெண் இனத்தாரின் பொது விதி இது. பெண்களிடையில் அரிய ஆபரணங்கள் போன்ற உத்தமிகளும் பரிபூரணத்தின் உயர்ந்த சிகரத்தை எட்டியுள்ள மாதர்களும் இப்போதுங்கூட இருக்கிருர்கள்.

இயற்கை அன்னை பெண்களுக்கு விசேஷ அழகு, கவர்ச்சி, ஒய்யாரம் ஆகிய சக்திகளை அருளுகிருள்— இவற்றினுல் மனிதர்களின் இதயங்களைக் கவருவதற்காக. ஓர் ஸ்திரி தான் உணராத ஒன்றை உணர்ந்தவளாகப் பாசாங்குபண்ணியும், சரஸவலை வீசியும் ஆடவனின் இதயத்தை வென்று தன் எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொள்கிருள். மனிதன் காமத்தால் ஆடுகிறபோது எவ்வளவு புத்திசாலியாக இருந்தபோதிலும், பெண்களுக்கு அடிமையாகித் தன் அறிவையும் விவேகத்தையும் இழந்துவிடுகிருன். யஜமானனுகிய பிராண நாயகன் ஒருவனை எப்போதும் அவள் விரும்புகிருள். ஹிந்து சாஸ்திரங்கள் அடியிற்கண்டவாறு முழங்குகின்றன:- ''தன் தகப்பனுரின் பாதுகாப்பில் ஓர் பெண் இருந்துவரவேண்டும். விவாஹமான பிறகு அவள் தன் கணவனின் சொற்படி நடந்து அவனுடைய பாதுகாப்பில் இருக்கவேண்டும். கணவனை இழந்து விட்டால், அவள் தன் புத்திரனின் பாதுகாப்பில் இருக்கவேண்டும். இயல்பாகவே ஓர் பெண் கீழ்ப் படியும் குணத்தவள் எனக் கருதப்படவேண்டும். பூரண சுயேச்சையான நிலையில் அவள் இருந்துவர நேருமானுலும், அவள் உடனே ஒரு மனிதனை அண்டி அவன் சொற்படி இருந்து வரவேண்டும்.''

இங்கிலாந்து தேசத்தின் பழஞ்சட்டங்களில், கணவன் என்பவன் மனைவிக்கு எஜமானன் என்று அழைக்கப்படுகிருன். இதே மாதிரி மனு என்பவரும் கூறியுள்ளார். பால் முனிவர் (Saint Paul) ''மனைவிமார்களே! உங்கள் கணவனுர்கட்குக் கீழ்ப் படியுங்கள்'' என்று கூறியுள்ளார். ஆனுல் கணவன் மார்கள் இறுமாப்போ தற்புகழ்ச்சியோ கொள்ளலாகாது. அவர்கள் தங்கள் மனைவிமார்களை உத்தரவிடலாகாது. கணவனும் மனைவியும் ஒருவர்க் கொருவர் விருப்புக்களுக்கு வெறுப்பு கொள்ளாமல்

சகித்துக்கொள்ள வேண்டும். அவர்களிடையில் அபிப்ராய பேதங்கள் இல்லாவிடினும், மனோ பாவங்கள் மாறுபடலாம். மனோபாவங்களில் வேறுபாடு இருக்கலாம். வாழ்க்கையின் மஹத்தான குறிக்கோள்களிலே ஒற்றுமை வேண்டும். கணவன் அபிப்ராயப்படி மனைவி ஒழுகவோ, மனைவி அபிப்பி ராயப்படி கணவன் ஒழுகவோ செய்யலாம். இப்படியிருந்தால்தான், சந்தோஷகரமான ஓர் குடும்பத்தை அனுபவித்து, அமைதியான வாழ்க்கையை நடத்த முடியும். சகலவிதமான விஷயங்களையும் அறிந்துகொள்ளப் பெண்கள் பயிற்சியளிக்கப்பட வேண்டும். கல்வியறிவு புகட்டி வாழ்க்கையின் விஷயாதிகளில் நேருக்குநேர் அவர்கள் கொண்டுவரப்பட வேண்டும். பெண் களுக்குச் சிறிய மூளை உண்டென்றும் கற்பனா சக்தி சுத்த பூஜ்யமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் தேவையான கட்டுப்பாட்டின்கீழ் அவர்களைப் பழக்கப்படுத்தினால், கற்பனாசக்தியை விருத்தி பண்ணலாம். தீவிரமாகவும் விஸ்தாரமாகவும் மனத்தைக் கட்டுப்படுத்துதலின் மூலமாக, கற்பனா சக்தியைப் பெறமுடியும். ஆடவனால் செய்யப்படும் ஒவ்வொரு காரியத்தையும் ஸ்திரீகளில் பலர் யோக்கியமாகச் செய்துமுடிக்கும் திறமை பெற்றுள் ளார்கள். சில துறைகளிலே ஆடவரைப்போல அவ்வளவு திறமைசாலிகளாகப் பெண்கள் வருவதற்கு நேரம் இல்லை. வீட்டுக் காரியாதிகளை அவர்கள் நிர்வகிக்க வேண்டும். வீட்டுக் காரியாதி களையும், சமுதாயக் கடமைகளையும் நிர்வகிப் பதிலேயே அவர்களுக்குக் காலம் சரியாகப்போய் விடுகிறது.

விக்டோரியா மஹாராணியார் ஒப்பற்ற விதத்தில் பெரும் ராஜ்யத்தை அரசாட்சி புரிந்தார். எலிசபெத் மகாராணி ஓர் மஹத்தான பெண்மணி.

சரோஜினி தேவியார் இனிமையான பிரசங்கியார். விஜயலக்ஷ்மி ஓர் மந்திரி. ஔவையார் மஹத்தான அறிவாளி, கவி. ஸ்ரீ ஆண்டாள் பெரியதோர் பக்தை. சாரதாமணி அம்மையார் தூய அன்னை யாக மாறிவிட்டார்கள். சைனு தேசத்தில் நடந்த யுத்தத்திலே அரசர் **சியாங்-கே-ஷேக்** என்பவருக்கு உணர்ச்சியூட்டி வழிகாட்டிய அம்மையார் அவர் மனைவியார். அவ்வம்மையாரின் பொறுப்பில், பொதுவாக சைனுவைப் புனருத்தாரணம் செய்யும் மஹத்தான உழைப்பும், குறிப்பாக சைனு தேசத்தின் பெண்மையைச் சீர்திருத்தும் பணியும் வந்தமைந்தன. ஸ்டாலின் என்பவரின் மனைவியார் ஆலைத் தொழிலாளி—வழக்காடும் சக்திவாய்ந்தவர். மிக மிக எளிய வாழ்க்கையை நடத்தினர். ரூஸ் வெல்ட்டு அவர்களின் மனைவியார் அவரைப் போலவே முக்கியத்துவம் வாய்ந்த பிரமுகர். **டாட் ஹண்டர் பள்ளிக்கூடத்தில்** அவ்வம்மையார் ஆங்கிலம், சரித்திரம், ஆட்சிமுறை ஆகிய பாடங்களைப் பெண்களுக்குக் கற்றுக் கொடுத்தார் கள். இந்தியா முழுமையிலும், பம்பாய் **மிஸ். ஹேமலதா**, M. A., LL. B. எனும் பெண்மணியார் மாத்திரமே ஸ்திரீ வக்கீலாக விளங்கினர்கள். கோட்டாவிலுள்ள **மிஸ். ராமப்பியாரி**, M. A., B. T. பரிசுத்தமான சீமாட்டி. அவ்வம்மையார் நல்ல ஓர் சாதகி. **மிஸஸ். லீலாவதி கார்டே** எனும் அம்மையாரும் தூய மாதுசிரோமணி. இவ் வம்மையார் யோக்கியதாம்சம் பெற்ற ஓர் மருத்துவர். **ரூர்கீ** எனும் இடத்தில் ஏழைகளுக்குத் தொண்டுபுரிந்து வந்த பெரியதோர் சாதகி. **கஸ்தூரிபாய் காந்தி** எளிய, ஆடம்பரமற்ற (காந்திக்குகந்த) மனைவியார். முதுமைப்பருவத் திலும்கூட **ராஜ்கோட்** கலகத்தின்போது, ஒத்துழை யாமை இயக்கத்தை நடத்த முன்வந்தார்கள். அம்மையார் மிகவும் பொறுமையாகவும் கண்ணிய

மாகவும் இருந்தார்கள். டிவேலரா என்பவரைப் போலவே, அவருடைய மனைவியும் புத்திசாலியாக விளங்கினாள். ஐரி எனும் பிரதேசத்தில் கலாச்சார வளர்ச்சியில் அவள் பெரிதும் ஈடுபட்டாள்.

பெண்டிரும்கூட வேலை தேடி, தங்கள் காலத்தையும் சக்தியையும் சம்பாதிப்பதில் செல விட்டால், குடும்பமும் குழந்தைகளும் கலங்க நேரிடும். பண்பட்ட மனைவி மார்களாகவோ, அன்புக்குரிய தாய்மார்களாகவோ ஆகமாட்டார் கள். குழந்தைகள் திறம்பட வளர்க்கப்பட்டு, புத்திசாலித்தனமான பயிற்சி யளிக்கப்படாமல் போய்விடுவார்கள். ஸ்திரீகள் பண்பாடு அமைந்த மனைவிமார்களாகவும் தாய்மார்களாகவும் மாற வேண்டும். இது மஹத்தான திட்டத்தில் இயற்கை அன்னையின் வழிமுறையாகும் ஓ, தேவிகளே! இதைப் பூர்த்தி செய்து எப்போதும் மகிழ்ச்சி யுடனிருங்கள்.

## 6 பெண்மையின் பெருமை

ஹிந்துப் பெண்களின் பக்திமயமான பண்பைப் பற்றி சில வார்த்தைகளைப் பேச நான் விரும்பு கிறேன். இந்தியாவில், பெண்மணிகளால் மாத்திரமே மதம் சம்ரக்ஷிக்கப்படுகிறது. அவர்க ளிடத்தில் இயற்கையாகவே மதாசார அறிவு விசேஷமாய் இருக்கிறது. ஹிந்துப் பெண்கள் பக்தியில் சிறந்தவர்கள். தத்தம் தினசரி நடத்தை யாலும் வாழ்க்கை அனுபவத்தாலும் அவர்கள் ஆடவர்களிடத்தில் மதாசார தத்துவத்தைப் புகட்டுகிறார்கள். அவர்கள் அதிகாலையில் எழுந்து, வீடுகளைச் சுத்தம்பண்ணி, ஸ்நானம் செய்து ஜபிக் கிறார்கள். வீட்டில் ஒரு சிறு கோயிலைச் செய்து, பகவானுடைய திருப்படங்களையும் பூஜைக்குரிய

பாத்திரங்களையும் வைத்துக்கொள்கிறார்கள். அந்த இடத்தைப் புனிதமாக வைத்துக்கொண்டு, அந்தி வேளையில் தீபாராதனையும் பிரார்த்தனையும் நடத்துகிறார்கள். வீடு முழுவதையும் ஆத்மீய அதிர்ச்சி அலைகளால் நிரப்புகிறார்கள். வீட்டிலுள்ள நாஸ்திக மனப்பான்மைகொண்ட ஆடவர்கள் அவர்களுடைய தூண்டுதலின் மூலம் அச்சத்தால் ஏதோ சில பிரார்த்தனைகளைச் செய்யும்படி வற்புறுத்தப்படுகிறார்கள். உண்மையில், வீட்டைப் பெண்களே ஆளுகின்றார்கள். அவர்கள் சக்தியின் தோற்றங்களாவார்கள். அவர்கள் ஆடவர்களை அடக்குகிறார்கள்.

பெண்கள் **அபலைகள்** அதாவது பலமற்றவர்கள் என்று கூறப்படுகிறார்கள். ஆனால் உண்மை பார்க்குமிடத்து அவர்கள் **பலைகள்** (பலமுள்ளவர்கள்). இந்து மதத்தின் தலைசிறந்த திறவுகோலை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சக்தி மாதாவின் தோற்றங்கள். பிரகிருதித் தத்துவம் அவர்களிடத்தில் பிரபலமாய்க் காணப்படுகிறது. தற்காலத்தில், பெண் வக்கீல்களும், பெண் டாக்டர்களும் வெளிநாட்டு யோக்கியதாம்சங்கள் பெற்றவர்களாய் இருக்கக் காண்கிறோம். சட்டசபைகளில் பெண் அங்கத்தினர்களும், விமானங்களை ஓட்டும் பெண்டிரும் இருக்கிறார்கள். வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் இங்ஙனம் பெண்கள் போட்டியிட்டால், ஆடவர்களின் எதிர்கால கதி என்ன ஆகும்? ஓர் பெண் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறவள், சம்ரக்ஷிக்கிறவள்.

ஆத்மீய நெறியில் உமது மனைவியைப் பயிற்றுவிக்க வேண்டும். அவளும்கூட கடுமையான சாதனை பயிலல் வேண்டும். வீண் பேச்சுக்களால் பயன் எதுவும் இல்லை. அவள் கணவனுக்கு மனப்பூர்வமாகத் தொண்டு செய்தால், அவரது உடம்பை

நல்ல மனத்தோடு பாதுகாத்தால், மஜ்னுவின் லேலாவைப்போலவும், சத்தியவான் சாவித்திரியைப் போலவும், அத்திரி மஹரிஷி பத்தினி அனுசூயை யைப் போலவும், அவள் தன் கணவனுடைய பக்தி வடிவத்தின் மூலமாய் ஆத்ம சாக்ஷாத்காரம் அடையக்கூடும். பக்கத்தில் மனைவி இல்லாமல் மதாசாரக் கிரியை எதுவும் செய்வதற்குக் கணவனுக்கு உரிமை கிடையாது. ''எங்கு பெண்கள் மரியாதையாய் நடத்தப்படுகிறார்களோ, அங்கு தேவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள்; ஆனால் எங்கே பெண்கள் மரியாதையாக நடத்தப்பட வில்லையோ, அங்கே இயற்றப்படும் புனிதமான செயல் எதுவும் பயன் தராது'' என்று **மனுஸ்மிருதி** முழங்குகிறது. இந்தியப் பெண்மணிகளின் பெருமை அவ்வளவு சிலாக்கியமானது.

கணவன் ஆத்மீயத்துறையில் இயங்க, **மனைவி** பஞ்சேந்திரிய சுகங்களில் ஈடுபடுத்துவதற்குக் கணவனை இழுத்தாலும் அல்லது மனைவி ஆத்மீயத் தில் முன்னேற, கணவன் சிற்றின்பங்களில் திளைக்க மனைவியை வற்புறுத்தினாலும், உலகில் உள்ள அத்தகைய வீடு சோகமான இடம் (உண்மையான) அசல் நரகமே ஆகும். தம்பதிகளில் கணவன் மனைவி ஆகிய இருசாரார் இறைவனைப்பற்றிய பேரறிவைப் பெறுவதற்கு அத்யந்த ஆசையோடு நாடவேண்டும். ஆத்மீய ஞான வாழ்க்கை என்ற நூலினால் அவர்கள் மனமொத்துக் கிரமமாக இணைக்கப்பட்டவர்களாய் இருத்தல் வேண்டும். கணவனும் மனைவியும் பூரண இலக்ஷிய நோக்கத் துடன் தெய்வீக வாழ்க்கை நடத்துகிற வீடு உண்மையில் ஒரு **வைகுண்டமே** ஆகும். ஹரி நாமத்தை இடையறாது பாடுதல் **அவரது** மந்திரத்தை ஜபித்தல், திவ்யமான நூல்களைக் கற்றுக்கொள்ளல், இந்திரியங்களை அடக்குதல்,

பக்தர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் தொண்டுபுரிதல் ஆகியவை கொண்டதே தெய்வீக வழ்க்கை!

பாணிக்கிரஹணத்தின்போது உச்சரிக்கப்படும் மந்திரத்திற்குப் பொருள் :— "நல்ல சந்ததி பெறுவதற்கும உனது கணவனுகிய என்னேடு முதுமைப்பருவம்வரை நீ வசிப்பதற்கும் நான் உனது கரத்தைப் பிடித்துக்கொள்கிறேன். பகன், ஆர்யமா, சாவித்திரி, புராந்தி இவ்வாருக வடிவெடுக்கும் ஏகக் கடவுள் குடும்பஸ்தனுடைய கடமைகளே நிறைவேற்றுவதற்கு என்னிடம் உன்னே ஒப்படைத்திருக்கிருர்." என்பது மணமகன் மண மகளேப் பார்த்து, "வீரர்களேப்போன்ற பல சந்ததிகளேப் பெற்றெடுப்பாய். ஏகமூர்த்தியை வழிபட்டு நமது ஆனந்த வாழ்க்கைக்கு அடிகோலு வாயாக" என்று அர்த்தம் தொனிக்கும்படியான மந்திரத்தைக் கூறுகிருன்.

**சூடாலே** என்பவள் யோகினி அரசி. அவளிடம் அநேக அற்புதமான சக்திகள் காணப்பட்டன. தனது கணவன் **சிகித்வஜன்** என்பவர் வெளியே போயிருந்தகாலத்தில் சூடாலே பெரியதோர் சாம்ராஜ்யத்தை ஆண்டுவந்தாள். **சுலபை** என்பவள் பிரஹ்மவாதினி. ஆத்ம விசாரத்திலும், பிரஹ்ம சிந்தனேயிலும் அவள் அழுந்திக்கிடந்தாள். அவளுடைய பெயர் உபநிஷத்துக்களிலும், பிரஹ்ம சூத்திரங்களிலும் காணப்படுகிறது. பெண்மணிகள் தங்கள் பதிவிரதா சக்தியால் எதையும் சாதிக்க வல்லவர்கள். சூரியனே உதிக்கவிடாமல் நிறுத்தவும் அவளால் முடியும். சாவித்திரி தன் கணவனுகிய சத்தியவானுக்கு உயிரை மீட்டுக் கொடுத்தாள். மரணதேவனுகிய எமனுடன் அவள் போரிட்டாள். அத்திரி மஹரிஷியின் பத்தினியும், ஸ்ரீ தத்தாத்தி ரேயரின் மாதாவுமாகிய அனுசூயாதேவியின் கற்புத்

திறமையைப்பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். திரிமூர்த்திகளைக் குழந்தைகளாகச் செய்தாள் அவள் தனது கற்பின் சக்தியால். **கார்க்கி** என்பவள் ஓர் ஞானி. அவளுடைய பெயர் பிரஹதாரண்யக உபநிஷதத்தில் வருகிறது. ஜனக மஹாராஜாவின் தர்பாரில் பூரண நிர்வாணமாகத் தோன்றிய கார்க்கி, யாக்ஞவல்கிய மஹரிஷியோடு தத்துவார்த்த சம்பாஷணையில் ஈடுபட்டாள். **மதாலசா** என்பவள்கூட ஓர் ஞானி. தன் புத்திரர்களை யெல்லாம் ஞானிகளாக மாற்றிவிட்டாள். ''ஸுத்தோஸி, புத்தோஸி, நிரஞ்சனோஸி-ஸம்ஸார மாயா பரிவர்ஜிதோஸி'' என்ற பாட்டை அவள் அடிக்கடி பாடுவாள். **இதன் அர்த்தம்**:— ''ஓ, குழந்தாய்! நீ தூய்மையானவனும், சர்வத்தையும் அறிந்தவனும், குற்றமற்றவனும், மாயைக்கு எட்டாதவனும் இருக்கிறாய்''. குழந்தைகள் தாய்ப்பாலுடன் வேதாந்த உபதேசங்களையும் உட் கொண்டு, தாய் தொட்டிலை ஆட்டிப்பாட, வளர்ந்து மஹான்களாக மாறினார்கள். பெண்கள் யாவரும் இவளுடைய உதாரணத்தைப் பின்பற்றி தங்கள் குழந்தைகளை நல்லொழுக்க நெறியில் பயிற்றுவிக்கவேண்டும்.

பண்டைக்காலத்தில், பெண்கள் கன்னிகை களாகவே இருந்து, மஹரிஷிகளுக்குத் தொண்டு புரிந்து, ஆத்மாவைக் குறித்துத் தியானித்து, பிரஹ்மஞானத்தைப் பெற்றார்கள். தூய்மையான பூணூலைத் தரித்துக்கொண்டிருந்தார்கள். பிரஹ்ம விசாரணையிலும், நிதித்தியாசனத்திலும் அவர்கள் ஈடுபடலானார்கள். **ரெய்க்வா** என்பவர் ஓர் நைஷ்டிக பிரஹ்மச்சாரி. ஜனஸ்ருதி என்ற அரச னுடைய மகள் ரெய்க்வாவுக்குத் தொண்டு புரிந்து கொண்டிருந்தாள். துறவு அல்லது நிவிர்த்தி மார்க்கத்தில் ஈடுபடுவது பொதுவாக ஸ்திரீகளுக்கு,

குறிப்பாக இளம் பெண்களுக்குக் கடினமென்பதில் சந்தேகமில்லை. ஆடவர்களைப்போன்று அவர்களுக்கு அவ்வளவு சுதந்தரம் கிடையாது. ஆடவர்கள் தங்கள் இஷ்டம்போல் எங்கேனும் படுத்து நடமாடுவார்கள். சந்நியாசினிகளுக்கென்றே தனி ஆசிரமம் ஏற்படாதது வருந்தத்தக்கதோர் விஷயம்.

உரோமாபுரியில் **மேரி மாக்டெலின்** என்பவள் ஓர் விபசாரி. பத்தாயிரம் நபர் கொண்ட கும்பலொன்று அவளைக் கல்லாலடித்துக் கொல்ல வந்ததும், **ஏசுகிறிஸ்துப் பெருமான்** அக் கும்பலைப் பார்த்து, ''உங்களில் ஒரு பாவமும் செய்யாதவன் எவனோ அவன் அவளைக் கல்லாலடிக்கட்டும்'' என்று முழங்கினார். இம்முழக்கத்தைச் செவியுற்ற கும்பல் பேசாமல் இருந்துவிட்டது. அடுத்த க்ஷணத்தில், **மேரி மாக்டெலின்** ஏசுகிறிஸ்துவின் திருவருளினால் ஓர் ஞானியாக மாறிவிட்டாள். இறைவனுடைய திருவருள் எப்போது, யார்மீது, எப்படி இறங்கும் என்று கூறுவது மிகவும் கஷ்டமானது. ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான், ''ஓ, பார்த்தா! ஸ்திரீகள், வைசியர்கள், சூத்திரர்கள் கூட, பாபக்கருவாயிலிருந்தாலும் **என்னைச்** சரணடைந்தால், அவர்களும் மிக உயர்ந்த நெறியில் செல்லுபவர்கள் ஆவார்கள்'' என்று உபதேசித்துள்ளார். அன்புக்குரிய தேவிகளே! அப்படியானால், கவலைப்படுவதற்கு என்ன காரணம் இருக்கிறது? கவலையை ஒழித்துக்கட்டுங்கள். எழுந்து சுறுசுறுப்பாய் இருங்கள், போராடுங்கள், முயற்சிபண்ணுங்கள், பயிற்சிபுரியுங்கள், மெதுவாக முன்னேறுங்கள், மனமார்ந்த சாதனையைச் செய்யுங்கள். தைரியமாக முன் செல்லுங்கள். சர்வ தயாபரனாகிய சர்வேஸ்வரன் உம்முடைய முயற்சிகளுக்கெல்லாம் வெற்றிக் கிரீடத்தை

நிச்சயமாய்ச் சூட்டுவார். நம்மில் மகா கொடியவர்கள்கூட கதிமோக்ஷத்தைப் பெறக்கூடும்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா நமக்கு உறுதி மொழியைத் தந்துள்ளார். ஓ! வித்யா! மீராவைப் போலிருக்கப் பிரியப்படமாட்டாயா? அரண்மனையைவிட்டுக் கணவனால் வெளியே துரத்தப்பட்டாள் மீரா. அவள் பருவப் பெண். அவளை அவர் (கடவுள்) இரக்ஷிக்கவில்லையா? கொடிய கணவனுடைய உத்தரவுப்பிரகாரம், ஆற்றில் தள்ளப்பட்டபோது, கடவுள் அவளைத் தன் மடிமீது வைத்துக்கொண்டார். அவர் அதே மாதிரி உம்மையும் செய்யமாட்டாரா? **அவரிடத்தில்** பரிபூரண நம்பிக்கை வைத்து நிம்மதியாய் முழு ஓய்வுடன் இருப்பீராக. மீராவைப் போலப் பாடுங்கள். பிரஹலாதனைப் போலப் பிரார்த்தனை செய்யுங்கள்.

ஹரியினுடைய நாமத்தை உச்சரித்துக் கொண்டே **சசிதேவி** தன் குழந்தையின் தொட்டிலை ஆட்டினாள்; அக்குழந்தையின் உள்ளத்தில் பக்தியாகிய தேனைப் புகட்டினாள். வங்காள மக்களின் மனப்போக்கையே மாற்றியமைத்த **கௌரங்க மஹானை** உலகுக்கு வழங்கினாள். கடலில் இருண்ட ஆழங்காண முடியாத பாதாளத்தில் விலையுயர்ந்த முத்துக்களும், தூய்மையான பிரகாசம் பொருந்திய இரத்தினங்களும் காணப்படுவனபோல, உங்களில் கூட அனேக சூடாலைகளும், சசிதேவிகளும், அனுசூயாதேவிகளும், சுலபைகளும் இருக்கிறார்கள்.

ஓ! தேவிகளே! நவநாகரீகத்திலும் (Fashion) காமவெறியிலும் (Passion) உங்கள் வாணாளை வீணாக்காதீர்கள். கண்களைத் திறந்து பாருங்கள். அறநெறியில் நடக்கவும். பதிவிரதா தர்மத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். உங்கள் கணவரிடத்தில் தெய்வீகத்தன்மையைக் காணுங்கள்.

ஸ்ரீமத் பகவத்கீதையையும், உபநிஷத்துக்களையும், பாகவதத்தையும், இராமாயணத்தையும் கவனமாய்ப் படிக்கவும். சுலபையைப் போலவும், கர்க்கியைப் போலவும் நல்ல கிரஹஸ்த தர்மிணிகளாகவும் பிரஹ்ம விசாரிணிகளகவும் ஆகுக. அநேக கௌரங்கர்களை உற்பவித்து வழங்குங்கள். உலகத்தின் தலைவிதி முற்றிலும் உங்கள் கையிலேயே இருக்கிறது. உலகத்தின் மூலச்சாவி உங்களிடத்திலேயே உள்ளது. சொர்க்கத்தின் பேரானந்தம் ஆகிய கதவைத் திறந்துவிடுங்கள். உங்கள் வீட்டில் வைகுண்டத்தைக் கொண்டுவாருங்கள். ஆத்மீயத் துறையில் உங்கள் குழந்தைகளைப் பயிற்றுவியுங்கள். அவர்களின் இளவயதிலே ஆத்மீய விதையை நட்டுப் பயிராக்குங்கள்.

காலையில் கண்விழித்தவுடன் பெண்கள் கடவுள் நாமங்களைப் பாடவேண்டும். இதுதான் என்னுடைய தீர்க்கமான பிரார்த்தனை. தெய்வ நாமங்களைப் பாடுமாறு அவர்கள் தங்கள் குழந்தைகளைக்கூட பயிற்றுவிக்க வேண்டும். வீடு முற்றிலும் ஆத்மீய அதிர்ச்சிகளால் வியாபிக்கப்படட்டும். சமையல் செய்யும்போதும், வீட்டு அலுவல்களை நிறைவேற்றும்போதும் தெய்வ நாமங்களைப் பாட வெண்டும். இங்ஙனம், இரண்டு மாதங்களிலே, சர்வேஸ்வரனுடைய நாமத்தை உச்சாடனம் பண்ணும் வலுவான வழக்கம் ஒன்று ஏற்பட்டு விடும். தெய்வ சாட்சாத்காரம் பெறுவதற்கு இதுமட்டுமே போதுமானது. இந்தக் கலியுகத்திலே, கடவுளுடைய தரிசனத்தைப் பெறுவதற்கு தெய்வ நாமங்களைப் பாடுவதே சுலபமான மார்க்கமாகும். யாராவது இறந்துவிட்டாலும்கூட, சர்வேஸ்வரனுடைய நாமத்தைப் பாடும் வழக்கம் ரக்ஷணைக்கு வழி செய்யும்.

தேவிகள் எல்லோரிடத்திலும் தெய்வீக ஜோதி மிகுந்த பிரபையோடு பிரகாசிக்கட்டும்! தெய்வீக கற்புத் தேஜஸுடன் ஜ்வலிப்பார்களாக! அற நெறியில் நடந்து தெய்வ சைதன்யத்தைப் பெறுவார்களாக! அவர்கள் அவர்களுடைய வீடுகளிலே தூய்மையும் தெய்வீகமும் நிறைந்த வாழ்க்கையை நடத்தி இன்புறுவார்களாக! அவர்கள் தங்கள் கணவன்மார்களுடன் சீதாதேவி — ஸ்ரீ ராமரைப் போலவும், ராதா — கிருஷ்ணனைப் போலவும் வாழ்வார்களாக! கௌரங்கர், ஞானதேவர், சதாசிவ பிரஹ்மன், ஸ்ரீ சங்கரர் போன்ற உத்தமக் குழந்தைகளை அவர்கள் ஈன்று உலகுக்கு வழங்குவார்களாக!

## 7. சாதுரியமான மாது யார்?

ஓர் பெண் (Bridge) பிரிட்ஜ் என்ற சீட்டாட்டம் ஆடவும், டென்னிஸ் விளையாட்டு ஆடவும், (Piano) பியானோ என்ற இன்னிசைக் கருவியைக் கையாளவும், செய்தித்தாள் வாசிக்கவும் கூடுமானால், அவள் இக்காலத்தில் ஓர் சாதுரியமான மாது என மதிக்கப்படுகிறாள். விருந்தாளிகளை வசீகரப்படுத்தவும், கிளப்பில் நல்ல ஆங்கிலம் பேசவும், மோட்டாரையோ விமானத்தையோ ஓட்டவும் திறமை பெற்று, இங்கிலாந்தில் கல்வி கற்று, கத்தியும் கவர்முள்ளும் கொண்டு ஆகாரம் புசித்து, நாட்டியக் கலையும் அறிந்தாளானால், இன்னும் அதிக சாதுரியமான மாது என மதிக்கப்படுகிறாள். அவள் நூற்றுக்கு நூறு நாகரீகம் வாய்ந்த இக்காலப் பெண். இத்தகைய சாதுரியமான மாது ஒருத்தி I. C. S. படித்த தக்க கணவனை எவ்வித கஷ்டமுமின்றி அடையக்கூடும்.

கனவான்களுடன் எப்படிக் கை குலுக்குவது என்பது அவளுக்குத் தெரியும். அநேக நாவல்களை அவள் படிக்கக்கூடியவள். (Club) சங்கத்தில் தன் கணவனுடனும் இதர கனவான்களுடனும் சில சமயம் ராஜீய, சமூக பிரச்னைகளைப்பற்றித் தர்க்கிக்கவும் அவளால் இயலும். இங்கிதமான முறையில் உயரமான குதிக்கால் பூட்ஸ்களை அணிந்து நடப்பாள். அவள் தன் பர்த்தாவைப் பல்வேறு வகைகளால் பரவசப்படுத்துவாள். தற்கால நவீன அழகு சாதனங்களால் அவள் தன் முகத்தையும் உதடுகளையும் தக்கவாறு சிங்காரித்துக்கொள்வாள். பொருத்தமான முறையில் அவள் புகை பிடிக்கத் தெரிந்துகொள்ளுகிறாள். அவள் தன் கூந்தலை விதவிதமாகப் பின்னி அலங்கரித்துக்கொள்ளவும் அறிந்துகொள்ளுகிறாள். காலியானதாயிருந்தாலும் பையொன்றை எடுத்துச் செல்லுவாள். எப்படியானபோதிலும் அதை வைத்திருக்கவேண்டும். சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்த்தும் நிலையும் வாய்ந்த கௌரவமுள்ள செல்வச் சீமாட்டிபோலத் தோன்ற வேண்டுமென அவள் விரும்புகிறாள். அயல் நாட்டுப் பட்டங்களைப்பெற்று இந்தியாவுக்குத் திரும்பி வந்துள்ள வாலிபர்கள் இத்தகைய வனிதா ரமணிகளை நாடி நிற்கிறார்கள்.

''கற்புள்ளவளும், அடக்கமுள்ளவளும், பக்தி சிரத்தையோடு தன் கணவனுக்குத் தொண்டு புரிபவளும், இதர ஆடவர்களோடு உறவாடாதவளும், எளிய ஆடை உடை அணிபவளும், அக்னி ஹோத்ரம், இதர மதாசாரச் சடங்குகளை நிறைவேற்றுவதில் தன் கணவனுக்குத் துணைபுரிகிறவளும் அளவிறந்த பக்திசிரத்தையுடன் விருந்தாளிகளைக் கவனிக்கிறவளும், ஆடவர் முன்னிலையில் பேசாதவளும், இராமாயண பாகவத நூல்களைக் கற்றவளும், வீட்டு அலுவல்களில் சதாகாலமும்

ஈடுபட்டுழைப்பவளுமான பெண்மணிதான் உண்மையில் ஓர் தேவி ஆவாள். உண்மையில், அவள் சாதுரியமான மாது ஆவாள்'' என்று ரிஷிகளும் முனிவர்களும் கூறியுள்ளார்கள்.

சுலபை ஓர் சந்நியாசி. இளமைப் பருவத்திலேயே உலகைத் துறந்தாள். நான்குவிதமான மோக்ஷசாதனங்கள் அவளிடம் நிறைந்திருந்தன. வேதங்களை அறியும் ஞானம் அவளுக்கு உண்டு. ஜனக மகாராஜனோடு தர்க்கித்து அவருடைய சந்தேகங்களைத் தீர்த்தாள். ஆத்மஞானம் படைத்தவள். உண்மையில் அவள்தான் சாதுரிய மாது. நம்முடைய இதயங்களில் அவள் இன்னும் வசித்துவருகிறாள். அவளைப்பற்றிய அருமை பெருமைகளைப்பற்றி மகாபாரதமும் உபநிஷதங்களும் எடுத்து முழங்குகின்றன. பிரஹ்மஞானம் நிறைந்த இத்தகைய சாதுரிய மாதர்கள்தான் உலகத்திற்குத் தேவை. தங்கள் கணவன்மார்களின் திரவிய சாதனங்களை வற்றச்செய்து அவர்களைத் துயரத்திற்கும் கவலைக்கும் இலக்காக்கும் வீண் ஆடம்பர, பாவனைகள் வாய்ந்த வண்ணாத்திப் பூச்சிகளைப் போன்ற வனிதையர்கள் உலகத்திற்குத் தேவை இல்லை.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் மகிமையை சதா காலமும் பாடினாள் மீரா. கிரிதாரா நகர்மீது ஏற்பட்ட பிரேமையிலே அவள் இதயம் தோய்ந்திருந்தது. சாம்ராஜ்யம் அவளுக்கு ஒரு துரும்பு. ஆத்மஞானத்தைத் தூண்டுகிற அவளுடைய கீதங்கள் இன்னமும் ஆயிரக்கணக்கான மக்களுக்குப் பக்தி ஆவேசம் ஊட்டுகின்றன. உலகம் உள்ளளவும், ஸ்ரீ கிருஷ்ணபகவானின் நாமம் உள்ளளவும், அவள் வசித்துவருவாள். இறவாப் புகழை அவள் சம்பாதித்துவிட்டாள். அவள் தன் பக்தி மூலம்

தன் பெயரைச் சிரஞ்சீவியாக நிலைநாட்டிவிட்டாள். உலகம் இத்தகைய மீராக்கள் பலரையும் விரும்புகிறது.

**மதாலசா** ஆத்மசாக்ஷாத்காரம் அடைந்தாள். ''ஸுத்தோஸி, புத்தோஸி, நிரஞ்சனோஸி'' என்ற கீதத்தைப்பாடித் தன் குழந்தைகளைத் தொட்டிலில் ஆட்டி அவர்களைப் பிரமக்ஞானிகளாக உருவாக்கினாள். டென்னிஸ், பிரிட்ஜ், முதலிய விளையாட்டுகள் அவளுக்குத் தெரியாது. பியானோ வாசிக்கத் தெரியாது. மோட்டார் வண்டியையும் ஆகாய விமானத்தையும் ஓட்டவும் தெரியாது. ஆனாலும், உண்மையிலேயே அவள்தான் சாதுரியமான (பண்புள்ள) மாது. விலையுயர்ந்த சேலைகளையோ, நகைகளையோ, கழுத்து மாலைகளையோ அணியவில்லை. ஸாந்தி அவளுக்குக் கழுத்துமாலையாயிருந்தது. ஞானம் அவளுக்குக் கடகம்; விவேகம் அவளுக்குக் காதணி; அடக்கம் அவளுக்கு மூக்குத் திருகாணி; கற்பு அவளுடைய கைவளையல். முகத்தை வெண்மையான மாவினால் அலங்கரித்துக் கொண்டும், ஜாஜ்வல்லியமான பட்டுப்புடவையைத் தரித்துக்கொண்டும் அவள் நடமாடவில்லை. ஆனால் பிரஹ்மதேஜஸின் ஜ்வலிப்பினாலும் மஹிமையினாலும் அவள் பிரகாசித்தாள். இத்தகைய மதாலசாக்கள் இவ்வுலகத்திற்கு மிகவும் தேவை.

இறந்துபோன கணவனின் உயிரைச் சாவித்திரி தன் கற்பின் திறமையால் மீட்டினாள். அனுசூயா தேவி தன் கற்பின் பிரபாவத்தால் த்ரிமூர்த்திகளைத் தன் குழந்தைகளாக மாற்றினாள். தன் கணவனின் துன்பகாலத்திலும் தமயந்தி களைப்படையாமல், சலிக்காமல் தொண்டுபுரிந்தாள். சீதா தேவி கடும் சோதனைக்கு உள்ளாகி, தன் கணவனுக்குச் சேவை புரிவதையே வாழ்க்கையாக்கினாள். கிருஷ்ண பகவானைப் பிரிந்தகாலத்தில் அந்தப் பிரிவைத்

தாங்கமுடியாமல் கோபிகள் விரகதாபத்தால் வாடினார்கள். அவர்களுடைய உதட்டில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய நாமமே சதா பதிந்திருந்தது. இப்பெண்மணிகள் எல்லோரும் உண்மையில் சாதுரியமான (பண்புள்ள) மாதர்கள் ஆவார்கள். பல நூற்றாண்டுகள் கழிந்துபோனாலும், அவர்கள் இன்னமும் நமது இதயங்களில் வசித்து வருகிறார்கள்.

இப்பிரபஞ்சத்தில் முற்றிலும் மாயா சக்தியால் தாக்குண்டு எல்லா உயிர்களும் விருப்பு வெறுப்புக்களினால் எழுகின்ற த்வைத பாவனையுடன் நடமாடுகிறார்கள். தாங்கள் உண்மையாக என்ன செய்கிறோமென்று அவர்கள் அறிவதில்லை. உண்பது, குடிப்பது, விளையாடுவது, சந்தோஷமாய்ப் பொழுதுபோக்குவது — இவையே அவர்களுடைய குறிக்கோளும் லட்சியமுமாகும். என்ன பரிதாபகரமான நிலை! தங்களுடைய தெய்வீக இயல்பையும், சாதனையையும், புலன்களுடன் மனத்தை அடக்குதலையும், சுயக்கட்டுப்பாட்டையும், சாஸ்திரங்களைக் கற்று ஆராய்தலையும், ஜபம், தியானம் ஆகியவற்றையும் நற்குணங்களை விருத்தி செய்தலையும் அவர்கள் முற்றிலும் மறந்துவிட்டார்கள். நீதி நெறிப் பயிற்சியும் அவர்களுக்கு இல்லை. எப்படியேனும் பணத்தைச் சம்பாதித்துச் சுகமாக வாழ்ந்து வருகிறார்கள். பதற்றமில்லாமல் அவர்கள் சிந்திப்பார்களானால், உண்பதையும் உறங்குவதையும் தவிர அவர்கள் வேறொன்றுமே செய்ததில்லை. அந்தோ! மிக மிக விலைமதிக்கொணாத தங்கள் வாணாளை வீணாக்கிவிட்டார்கள்! அவர்கள் அஞ்ஞானமாகிய சேற்றினின்று விலகித் தங்களை உயர்த்திக்கொள்வதற்கான புனிதமான கைங்கர்யங்களில் ஈடுபடவே இல்லை!

நீங்கள் யாவரும் அஞ்ஞானம், மோஹம் அல்லது மாயையினின்று விடுபடுவீர்களாக! இவ் வுலகம் சீதை, ராதை, சாவித்திரி, சுலபை, அனுசூயை இவர்களைப்போன்ற உண்மையிலே சாதுரியமான (பண்புள்ள) மாதர்களால் சூழ்ந்து விளங்குக!

## 8. பெண்மணியே!
## குடும்ப பராமரிப்பே உனது பொறுப்பு!

துர்க்காதேவி–அன்னை–தனது லீலா விபூதியால் மாதர்களாக வடிவங்கொண்டு விளங்குகிற உலக மாதாவுக்கு வந்தனைகளும் வழிபாடுகளும் உரித்தாகுக!

ஆடவரும் பெண்டிரும் தத்தம் ஸ்வபாவம், சக்தி, யோக்கியதை முதலியவற்றிற்குத் தகுந்தாற் போல் பல்வேறு தொழில்களில் ஈடுபடவேண்டும். பெண்கள் ஆடவர்களுடைய வேலையைச் செய்யவோ, ஆடவர்கள் பெண்களுடைய வேலையைச் செய்யவோ முடியாது. சிறுவர்களைப் படிக்கவைத்துப் பராமரித்தல், தாய்மை, பாலர் சுகாதாரப் பணி, வீட்டுக் காரியாதிகளை நிர்வகித்தல் ஆகியவை போன்ற பணிகளுக்குப் பெண்கள் பிரத்தியேகமாகத் தகுதிவாய்ந்தவர்கள். இங்கே பெரியதோர் துறை அவர்களுக்கு அமைந்துள்ளது. மிகவும் பயன்தரத்தக்க, போற்றுதற்குரிய, பெருந் தன்மைவாய்ந்த பணி இதுவே. குடும்பம், இனிய குடும்பம், மகிழ்கின்ற குடும்பமே தேசீய வலிமைக் கும் சுபிட்சத்திற்கும் அடிப்படையாகும். சுகாதார, சாஸ்திரீய நெறியில் பாலர்களை வளர்ப்பதில் அன்னை தேசத்திற்கும், தேசீய கலாசாரத்திற்கும் எண்ணிறந்த தொண்டுகளைப் புரிகிருள். சிசுக்களைச் சம்ரக்ஷித்து வளர்த்தலே பெண்களுக்கு அமைந்த

மிகப் பிரதானமான திருப்பணியாகும். தேசீய சுகாதாரத்தையும் சுபிட்சத்தையும் உருவாக்கி நிலைநாட்டக்கூடிய வாய்ப்புக்கள் நிரம்பவும் பெண்களுக்கே உண்டு. வீட்டைக் கலாசார, நல்லொழுக்கப் பண்புமிக்க தொட்டிலாக விளக்குவதிலே, அவர்கள் தங்கள் பிரசித்தமான ஒப்பற்ற திறமைகளைப் பரிபூரண அளவில் பயன்படுத்தக் கூடும். வீடு ஓர் பெண்ணுக்கு ஏற்றதுறை. இத்துறைக்குப் புறம்பாக, கடவுள் அவளுக்கு அளித்த நோக்கத்தை நிறைவேற்றவே முடியாது.

சமூகத்தின் அலகு குடும்பம். மனைவி வீட்டுக்கோர் ராணியாகிருள்—அவள் பணியாற்றும் ஓர் தேவதூதப்பெண். அவள் வீட்டை இனிமையாக்குவதன்றி, தேசத்தைச் செழிப்பித்து மேன்மைப் படுத்தும் வீரர்களையும், மகரிஷிகளையும், யோகிகளையும், முனிவர்களையும், நல்ல பிரஜைகளையும் தோற்றுவிக்கும் சிசு சம்ரக்ஷண சாலையாக உருவாக்க வேண்டும். இதுதான் அவள் செய்யக் கூடிய பொருத்தமான பெருந்தன்மையான கடமையாகும். மூல ஊற்று பரிசுத்தமாயும், மாசற்றதாயும், பழுதுபடாததாயும் இருத்தல் வேண்டும். வீடு பூர்வீகமான சாசுவதமான பள்ளிக்கூடம். இங்கே பல்வேறு நற்பண்புகளைப் பயிலக் கற்றுக் கொள்ளுகிறோம். வாழ்க்கையின் பெரிய சிக்கல்கள் இங்கேதான் நீக்கப்படுகின்றன. குடும்பத்தின் அதிஷ்டான தேவதை அல்லது உற்சாகமூட்டும் சக்தி பெண்மணியே ஆவாள்.

ஆணும் பெண்ணும் சரிசமமானவர்கள் என்ற கொள்கை முற்றிலும் மேனுட்டுக்கொள்கை. இந்தியனுடைய அல்லது ஹிந்துவினுடைய கொள்கை என்னவென்றால், ஆணும் பெண்ணும், புருஷனும் சக்தியும் ஒன்றேயாம்; பகுக்கவொண்ணுதவர்கள்—என்பதாம். மனைவி **அர்தாங்கினி.**

அவள் தன் கணவனில் எப்போதும் வசிக்கிறாள். புருஷனுடைய பாதி உடம்பை அவள் வியாபித்துக் கொள்கிறாள். சீதை தன்னைத் தனி வியக்தியாகக் கருதவில்லை. இராமருக்கு உள்ளும் புறம்புமாய்ச் சீதை இருந்தாள். வீட்டுக்குரிய, சமய, சமூக வாழ்க்கையின் எல்லாப் படித்தரங்களிலும் எப்போதும் இந்தியப்பெண் கணவனும் தானும் ஒன்றென முற்றிலும் பாவிக்கிறாள். மனைவி யில்லாமல் கணவன் எந்தவிதமான மதாசாரச் சடங்கையும் நிறைவேற்ற முடியாது. "உன்னுடைய மாமனாருக்குச் சக்கரவர்த்தினியாய் இரு; உன்னுடைய மாமியாருக்குச் சக்கரவர்த்தினியாய் இரு; உன்னுடைய கணவருக்குக் கூடப்பிறந்த சகோதர சகோதரிகளுக்கும் சக்கரவர்த்தினியாய் இரு" என்று வேத கீதங்கள் அவளைப் போற்றி முழங்குகின்றன. வீட்டுக்கு ராணி அவள். மாத்ருத்வ மகிமையின் மூலமாய் அவள் வீட்டை ஜ்வலிப்பிக்கின்றாள். சம்பத்து, ஸாந்தம், அழகு, கவர்ச்சி, அருள் ஆகிய நற்பண்புகளுக்குத் தெய்வ மாகிய ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கும் அவளுக்கும் வித்தியாசமே இல்லை. ஆலோசனைசபை மண்ட பத்தில் போய் உட்கார்ந்து 'வோட்' போடுவதால் அவளுக்கு என்ன பிரயோஜனம் உண்டாகப் போகிறது?

இந்தியக் கோட்பாட்டின்படி, ஓர் பெண்ணின் சுதந்தரம், பெருமை, யோக்கியதை ஆகியவையும், பிரதானமாய் அதிகாரம் செலுத்தலும் தாய்மையில் அடங்கியுள்ளது. புராதன இந்தியாவில், தாயை வணங்கி, அவளால் நன்மை பயக்குமளவில் பயிற்று விக்கப்பட்டுச் சிறந்த வீரர்களானார்கள். இதற்கு நல்ல உதாரணமாக ஸ்ரீ ராமரும், பீஷ்மரும், யுதிஷ்டிரரும், ஸ்ரீ கிருஷ்ணபகவானும், சங்கரரும் விளங்குகிறார்கள். தற்கால ஐரோப்பாவிலும்கூட

இத்தகைய சான்றுகள் இல்லாமல் இல்லை. **நெப்போலியனும், கரிபால்டியும்** சிறந்த உதாரண புருஷர்கள். இத்தாலி தேசத்துச் சேனைத் தலைவரும் தேசாபிமானியுமான இவர் யுத்தகளத்தின் பயங்கரக் காட்சிகளிலே, தன் மகனை ரக்ஷிக்குமாறு முழங்காலிட்டு இறைவனைப் பிரார்த்திக்கின்ற தன் தூய அன்னையின் தோற்றம் தன்னைச் சூழ்ந்த கடுமையான அபாயங்களையும் கடக்கும்படி செய்ததைப்பற்றிக் கூறியிருக்கிறார் என்று சரித்திரம் முழங்குகிறது.

இக்காலத்தில், கல்வி பயின்றவள் என்று கூறப் படுகிற பெண்ணுக்கு உள்ள சுதந்தரத்திற்கோர் எல்லை இல்லை. இச்சுதந்தரம் அநேக குடும்பங்களை நாசப்படுத்தியுள்ளது. சமுதாயத்தில் அது ஒழுங்கீனங்களை சிருஷ்டித்துள்ளது. கௌரவம் வாய்ந்த பல குடும்பங்களுக்கு இது அவமானத்தைக் கொடுத்துள்ளது சுதந்தரத்தில் கொண்டுள்ள தெவிட்டாத அவாவினுல் பெண்கள், எல்லையைத் தாண்டிச் சென்று, மதிப்பிட முடியாத பொக்கிஷத்தை—பண்டைக்காலப் பெண்டிரால் களங்கமற்று வைத்துக்கொள்ள முடிந்ததை—இழந்துவிட்டார்கள்.

கற்பு, தூய்மை, எளிமை, தொண்டு ஆகியவை எப்போதும் இந்தியப் பெண்மைக்குரிய கோட்பாடு கள். அபாயகரமான காலங்களிலெல்லாம், இக் கோட்பாடுகளைப் பின்பற்றுவதன் வாயிலாக இந்தியப் பெண்மணிகள் ஸனாதன தர்மத்தைப் பரிபாலித்து வந்தார்கள். கடுமையான குழப்பங் கள், கொந்தளிப்புகள், ஆசைகாட்டி மயக்குதல் ஆகிய சோதனைக் காலங்களிலும் நமது தர்மத்தின் முதுகெலும்பு—அடிப்படையானது கண்ணைவிட்டு அகன்றதில்லை. இது பெரும்பாலும் இந்தியப்

பெண்மணிகளின் நல்லொழுக்கத்தாலும் கற்பின் மகிமையாலும் சாத்தியம் என்றே கூறவேண்டும்.

இந்தியப் பெண்களின் மகாநாட்டில் பெண்கள் விவாகரத்து செய்துகொள்ளும் உரிமையைத் தீவிரமாக விரும்பினார்கள். என்ன அவமானம்! மேனாட்டு மங்கையர்களின் உதாரணத்தை அவர்கள் பின்பற்றி வரலானார்கள். இழிவாகப் பின்பற்றும் குணம் இது. மேனாட்டு நாகரிகம் தழுவிய சில பெண்மணிகளின் வேலை இது. ஆர்யவர்த்தம் எனும் இந்தப் புண்ணிய பூமியில், புனிதமான பாரதவர்ஷத்தில் சீதை, ராதை, தமயந்தி, சாவித்திரி முதலானோர் கற்பும், தர்மமும் கலந்த இலட்சிய வாழ்க்கையை நடத்தினார்கள். படித்த பெண்கள் என்று சொல்லப்படுகிற சில அறிவீன மான பெண்கள் வீண் ஆடம்பரப் பிரியர்களாய்ப் பகிரங்கமாய்ப் புகைக்கிறார்கள்; சங்கத்தில் ஆடவர்களோடு தாராளமாய்ச்சீட்டு ஆடுகிறார்கள்; பெண்மைக்குரிய கண்ணியத்தைப் பறிகொடுத்த பாவைகள். சதிதர்மங்களையும், தாய்மைக்குரிய தகைமைகளையும் முற்றிலும் இழந்தவர்கள். இத்தகைய பெண்கள்தான் புதிய சட்டங்களையும் புதிய உரிமைகளையும் வழக்கத்திற்குக் கொண்டுவர விரும்புகிறார்கள். இவை தங்கள் சந்தோஷத்திற்கும், உயர் பதவிக்கும், நற்கதிக்கும் ஏதுவாயிருக்க மாட்டாது. இவர்கள் அழிவையே பெரிதும் நாடுகிறார்கள்.

பெண்களுக்கு 'வோட்டுரிமை கொடுத்து இந்தியாவுக்கு என்னதான் லாபம் 'ஏற்பட்டிருக்கிறது? நம்மவர்களில் சில ஸ்திரீகள் முனிசிபல் கௌன்சிலர்களாகவும் சட்டசபை அங்கத்தினர்களாகவும் ஆகியிருப்பதால் நமக்கு என்ன லாபம்? ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை.

அரசியல் கிளர்ச்சியில் பெண்கள் பலதரப்பட்ட நபர்களுடன் கந்தரகோளமாக (ஒழுங்கீனமாக) கலந்து உழைக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இத்தகைய கிளர்ச்சியில் பெண்கள் பங்கெடுத்துக் கொள்வது முற்றிலும் கேலிக்கும், அறிவீனத்திற்குமே இடந்தருகிறது. யெளவன பெண் தொண்டர்கள் ஆடவர்களோடு சேர்ந்து போராட்டத்திற்குப் புறப்படுகிறதைக் காண உண்மையில் அவமானமாயும், அவலக்ஷணமாயும் தோன்றுகிறது. இப்பெண் தொண்டர்கள் இவ்வகையில் தங்கள் மானத்தையும், நாணத்தையும், அந்தஸ்தையும் இழந்தவர்களாய்ப் பரிகாசத்திற்கும், அவமானத்திற்கும், அபாயத்திற்கும் உள்ளாகிறார்கள்.

அரசியல் போராட்டத்தில் ஓர் பெண் பங்கெடுத்துக்கொள்வது மிகவும் அபாயகரமானது. அவள் தாராளமாய்ப் பழகுவதால், கண்ணியம், நாணம், பெண்மை, உடல் தூய்மை, ஒழுக்கம் ஆகியவற்றைப் பறிகொடுக்கிறாள். ஆடவர்களோடு தாராளமாகப் பழகும் பெண் ஒருத்தி வெகு காலம் தனது கற்பைப் பாதுகாத்துக்கொள்ள முடியாது. இதற்கு விதிவிலக்குகள் இருக்கக்கூடும். இருந்திருக்கின்றன. சமூகப் பொது வாழ்க்கையில் ஆடவர்களோடு தாராளமாகப்பழகியும் கற்புடையவளாயிருக்கும் பெண் நிச்சயமாய் அமானுஷ்ய தன்மையுடையவள். இயற்கை உணர்ச்சிக்குட்பட்ட சாதாரண ஸ்திரீ விரைவில் வழி தவறி வீழ்வாள். மானுஷ்ய சுபாவம் தானாக இயங்கி பூர்த்தி செய்து கொள்ளும். அவர்கள் பெண்களை தேசாபிமானத்தினின்று கந்தரகோளத்திற்கும், சுதந்திரத்தினின்று துஷ்பிரயோகத்திற்கும் படிப்படியாக வழி காட்டியதன் விளைவாக, அப்பெண்களை பெண்மைக்கு மாறான அவலநிலையில் தள்ளி விட்டார்கள்.

நமது புராதன மகரிஷிகளும், மனு மஹானும் ஆடவர்களுடைய சுதந்தரத்தைக் காட்டிலும் பெண்களுடைய சுதந்தரத்தின்மேல் அநேக கட்டுப் பாடுகளை விதித்தார்கள். அவர்கள் உண்மையில் மிகச்சிறந்த அறிவாளிகள். இயற்கை நிலையையும் சட்டத்தையும் அவர்கள் தெளிவாகத் தெரிந்துக் கொண்டவர்கள். மகாபாரதத்தில் (வானபர்வத் தில்) திரௌபதி, ''தினந்தோறும் வீட்டைச் சுத்த மாக கூட்டி, தட்டுமுட்டுச் சாமான்களை விளக்கி, சமையல் பண்ணி தக்க காலத்தில் உணவைப் படைத்து உணவுப் பொருள்களைப் பத்திரமாக வைத்துக்கொண்டிருப்பேன். ஆழ்ந்தபக்தி சிரத்தை யோடு எனது கணவர்களுக்குத் தொண்டு புரிவேன். மிகுந்த ஜாக்கிரதையோடும், கண்காணிப்போடும் வீட்டுக்காரியங்களைச் சமாளித்துக் கொண்டு வருவேன். வேலைக்காரர்களுடைய தேவைகளைக் கவனிப்பேன். கணவன்மார்கள் கண் விழிப்பதற்கு முன் அதிகாலையில் எழுந்து நீராடி அலுவல்களைச் செய்வேன்,'' என்று கூறியுள்ளாள். இவள்தான் இலட்சியப் பெண்மணி-இவள் எங்கள் இதயங்களில் வாசம் பண்ணுகிறாள். தன் கணவனோடு சமத்து வத்திற்கோ சட்டசபையில் ''வோட்டு'' போடு வதற்கோ அவள் விரும்புவதில்லை. அடக்கமாய், எளிய வாழ்க்கை நடத்திக்கொண்டு, கற்புடைய வளாய், சுயக்கட்டுப்பாட்டுடன் கலாச்சார மடைந்தவளாய்த் தன் கணவனுக்குப் பணிவிடை புரிந்தவண்ணம் வாழ்ந்து வந்தாள்.

உலகத்தில் பெண்கள் கற்பு நெறியில் வாழ்ந்து ஆடவர்களுடைய வாழ்க்கைக்கு உண்மையில் ஆத்மீய பங்காளிகளாக விளங்குவார்களாக!

அரசியல் கிளர்ச்சியில் கலந்துக் கொண்ட காரணமாக வழுக்கி விழுந்த், பருவப் பெண்களின் உதாரணங்கள் உண்டு. அவர்கள் தங்களுக்காகவோ

கணவனுக்காகவோ, பெற்றோர், உலகத்திற்காகவோ எதுவும் செய்ய இயலாதபடி கெட்டுப்போகிறார்கள். இந்தியாவின் சுதந்தரத்திற்காகப் பாடுபடுகிறதாக அவர்கள் சொன்னால் இதைக்கேட்டு ஒருவன்சிரிக்கத் தான் செய்கிறான். ஸ்வதேசாபிமானத்தின் பெயரால் பெண்களை அரசியல் கிளர்ச்சியில் பங்கெடுத்துக்கொள்ளும்படி ஆதரவு அளித்தவர்கள் எல்லோருமே கணக்கிடமுடியாததீங்கை அறியாமல் புரிந்தவர்களாகிறார்கள். அநேக குடும்பங்களின் அமைதியை அவர்கள் அழித்து விட்டார்கள். எண்ணமுடியாத இருதய வெடிப்புகளுக்கு அவர்கள் தான் காரணம். அவர்கள் இளம் பெண்களின் மனதில் பொய்யானதோர் சுதந்தர உணர்ச்சியை யும், கணவன்களிடமும், பெற்றோர்களிடமும் ஓர் வெறுப்பையும் உண்டுபண்ணி விட்டார்கள்.

உலகத்தில் பெண்கள் கற்பு நெறியில் வாழ்ந்து, ஆடவர்களுடைய வாழ்க்கைக்கு உண்மையில் ஆத்மீய பங்காளிகளாக விளங்குவார்களாக! இந்தியப்பெண்கள் சுதந்தரத்திற்கும், ஆடவரோடு சமத்துவத்திற்கும். வோட்டுப்போட அதிகாரமும், உரிமையும் கோராமல் இருப்பார்களாக! அவர்கள் நாகரிகத்திற்கும் கொடிய போலிகளுக்கும் இலக் காகாமல் இருப்பார்களாக! சீதை, திரௌபதி, சாவித்திரி, அனுசூயை, தமயந்தி ஆகிய உத்தமி களின் உதாரணத்தைப் பின்பற்றுவார்களாக! அவர்கள் இலட்சிய மனைவிகளாகவும், நாட்டுக்கு இலட்சியத் தாய்மார்களாகவும் இலங்குவார்களாக!

## 9. வீட்டில் யோகம்

கணவன் மனைவிகளிடையில் சமயாசார ஒற்றுமை இல்லாதபோது வீடு சிலசமயம் நரகமாக ஆகிவிடுகிறது. கணவன் மதப்பற்றுள்ளவனாயிருந்

தால், மதப்பற்றில்லாத மனைவி அவனை மத சம்மந்தமான நூல்களைப் படிக்கவோ, தியானத்தில் உட்காரவோ, யாத்திரை செய்து புண்ணியக்ஷேத்தி ரங்களைத் தரிசிக்கவோ, பிரஹ்மச்சரியத்தைக் கைக் கொள்ளவோ, பெரிய மஹான்களோடு சத்சங்கம் வைத்துக்கொள்ளவோ அனுமதிக்கிறதில்லை. தன் கணவன் சந்நியாசியாகி விடுவானென்று அவள் பயப்படுகிறாள் அப்படிச் சந்நியாசியாகமாட்டே னென்று யதார்த்தமாகச் சத்தியம் பண்ணினாலும் கூட. எனவே, அவர்களுக்கிடையில் சதா காலமும் சச்சரவுகள் இருந்து வருகின்றன. கணவன் தக்க வாறு சம்பாதிக்கிறான்; சகலவிதமான சௌக்கியங் களும் உண்டு. ஆனால், மன நிம்மதி கிடையாது. ''உங்களுடைய மத சம்மந்தமான நூல்களை யெல்லாம் எரித்து விடுவேன். ஏனெனில் இவை களைப் படிப்பதால் உங்களிடத்தில் ஓர் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. என்னைப் புறக்கணித்து விடு கிறீர்கள். வீட்டுக்காரியங்களில் எவ்வித அக்கரை யும் எடுத்துக்கொள்ளவில்லை. இந்தப் புத்தகங்களை எழுதி, யோக சாதனைகளைச் செய்வதற்காக வழி வகைகளை வகுத்துத் தூண்டியுள்ள அந்த மனிதரின் தலைமேல் கற்களை வீசுவேன். முட்டாள்கள்தான் யோகத்தைப் பயிலுவார்கள்'' என்றெல்லாம் மனைவி தன் கணவனைக் கண்டிக்கிறாள். இத்தகைய மதப்பற்றில்லாத அஞ்ஞானப் பெண்களோடு ஆடவர்கள் எப்படிச் சந்தோஷமாய் வசிக்கமுடியும்? தாடகை போன்ற அசுர ஸ்திரீகளினிடையில் வசித்தாலும் வசிக்கலாம்; வீட்டில் சாந்தியைக் கலைக்கிற இத்தகைய கொடிய மாதர்களின் சகவாசத்தில் இருக்கவே முடியாது. ஆத்மீய சாதனை செய்வதற்கு உம்முடைய மனைவி தடுத்தால் நீர் சந்நியாசம் எடுத்துக்கொள்வதாக அமைதியாக தெரிவித்து விடவும். பின்பு, அவள் அறிவோடு பேசுவாள்.

கணவன் தன் மனைவியைக்கூட மத சம்மந்தமான துறையில் பழக்குவது ஓர் கடமை யாகும். அவன் ஜபம்செய்து கீர்த்தனங்களைப்பாட வேண்டும். இராமாயணம், பாகவதம் ஆகியவை போன்ற மத சம்பந்தமான நூல்களைக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்போதைக்கப்போது விரத அனுஷ்டானத்திற்கு அவள் இணங்க வேண்டும். மகாத்மாக்களால் நடத்தப்படும் உபந்நியாசங் களுக்கும் கதாகாலக்ஷேபங்களுக்கும் அவளை அழைத்துச் சென்று புண்ணிய யாத்திரை மேற்கொள்ள வேண்டும். மனைவி தன் கணவ னுடைய மதாசார யோக சாதனைகளுக்குத் துணை புரிய வேண்டும். அப்படிச் செய்தால்தான் அந்த வீடு அருள் பொழியும் நிலையமாகும்.

தங்கள் மனைவி மக்களின் தீய நடத்தையின் காரணமாகவும் வீட்டில் யோக சாதனை புரிவதற்கு இடைஞ்சல் ஏற்படுவதன் காரணமாகவும் சிலர் சந்நியாசம் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். மனைவி மார்கள் தங்கள் கணவன்மார்களுக்கு சாதனைகளை தொடர்ந்து சாதிக்கத் துணை புரிந்தால், கணவன் மார்கள் கிரஹஸ்தாஸ்ரமத்திலேயே தங்கியிருந் திருப்பார்கள். சமயாசார வாழ்க்கையை வீட்டிலே நடத்துவதற்கு தங்கள் கணவன்மார்களுடன் புத்தி சாலியான பெண்கள் ஒத்துழைக்க வேண்டியது கடமையாகும். அப்புறம்தான் தம்பதிகள் ஸாந்தியும் சந்தோஷமுமான குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ளக்கூடும். ''மதாசாரம் இல்லாத வீடு அரண்மனையாயிருந்த போதிலும் அது மயானம் ஆகும்,'' என்று சாஸ்திரங்கள் முழங்குகின்றன. கணவன் கூட தன் மனைவியினுடைய மதாசார சாதனைகளிலே இடையூறாக நிற்கலாகாது. ஆத்மீய முன்னேற்றத்திற்கும், வாழ்வின் தூய்மைக்கும்

எல்லா வழிகளிலும் அவன் அவளுக்குத் துணைபுரிய வேண்டும்.

குணத்திலும், அந்தக்கரணத்திலும், ஆத்மீயத்திலும் கணவன் மனைவிக்கும் இடையில் ஒற்றுமை வளருமாக! தம்பதிகள் பரஸ்பரமாய் யோக, மதாசார சாதனைகளில் துணைபுரிவார்களாக. கடவுளைச் சாக்ஷாத்கரித்தல் என்பது காவற்குறிப்புச் சொல்லாக விளங்குக! தூய்மை உங்களுக்கு மூதுரையாக இலங்குக! தர்மம் உங்களுடைய வழி காட்டியாக நிலவுமாக!

## 10. சாஸ்திரங்கள் பெண்களை ஏன் கண்டனம் செய்கின்றன?

ஆடவனைக்காட்டிலும் பெண்ணுக்கு எட்டு மடங்கு அதிகமாக மோகம் இருந்தபோதிலும், அவள் ஓரளவு இச்சையை அடக்கிக்கொள்ளும் சக்தி வாய்க்கப் பெற்றிருக்கிறாள். பெண் சகிக்கிற தன்மை உடையவள். அவள் வெறுமனே ஆடவனை மோகித்து மயக்குகிறாள். அவள் அவனுடைய இதயத்தில் காமத்தீயைக் கிளப்பி அது பற்றிஎரியும் படி செய்கிறாள். அவள் புன்முறுவலுடன் பார்க்கிறாள்; பிறகு சும்மா இருந்து விடுகிறாள். தக்க தருணத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறாள். ஆனால், ஆடவனோ பலவந்தத்தைப் பிரயோகிக்கிறான்—ஆக்கிரமிக்கின்றான்.

உண்மையிலே அவன் தான் குற்றவாளி, சுறு சுறுப்பு கொண்டவன். அவன் மோகாவேசத்தின் பிடிப்பில் அகப்பட்டவுடன், அத்துமீறியவனாய் அறிவையும் நீதியையும் பிரயோகிக்கிற புத்தியின் திறமையை இழந்து விடுகிறான். நாக்கினால் நக்கி விளையாடுகிற நாய் போல், பெண்ணைச் சுற்றிக்

கும்மாளம் போடுகிறன். இதனுல்தான், முனிவர் கள் பெண்களை நிந்திக்கின்றனர். சாஸ்திரங்கள் அவர்களைக் கண்டனம் செய்கின்றன. ஆடவர் களுக்கு பெண் மீது வெறுப்பு உண்டாக்கி, காம உணர்ச்சிகளினின்றும், ஆக்கிரமிக்கின்ற தாக்குதல் களினின்றும் விலக்கி விவேகத்தைப் புகட்டுவதற் காகவே பெண்கள் கண்டிக்கப்படுகிருர்கள். சில பெண்மணிகள். ''நாம் கூட புத்தகங்கள் எழுதி ஆடவர்களைக் கண்டனம் செய்வோம்'' என்று புகலுகிருர்கள். தங்கள் மீது கொண்ட விரோத மனப்பான்மையினுல் முனிவர்களாலும், சாஸ்திரங் களாலும் தாக்கப்படுகிறதாகக் கருதுகிற பெண்கள் அறிவீனத்தால் அப்படிக் கருதுகிருர்கள். ஓரிடத்தில் பெண்களைக் கண்டித்து எழுதுகிற முனிவர்கள் இன்னொரு இடத்தில் அவர்களைப் புகழ்ந்து பேசி இருக்கிருர்கள். சாஸ்திரங்களும் அப்படியே. ''பெண்கள் மரியாதைக்கு உரியவர்கள். அவர்கள் அர்த்தாங்கினிகள். இறைவனுடைய சக்தியின் வடிவமாக அவர்கள் விளங்குகிருர்கள். பெண்களைப் போற்றுகிறவர்கள் மாத்திரமே சுபிட்சத்தைப் பெறக்கூடும்'' என்று முனிவர்கள் முழங்குவதன்றி சாஸ்திரங்களும் முறையிடுகின்றன.

ஆகையால் பெண்மணிகளே! கவலைப்படாதீர் கள், பழிக்குப்பழி வாங்காதீர்கள். முனிவர்களின் கருத்தையும், சாஸ்திரங்களின் சாரத்தையும் அறிந்து கொண்டு விவேகிகளாகுக!

## 11. மகான்களுடைய போதனைகளின் உண்மையான கருத்தை உணருங்கள்.

சிற்றின்ப ஆசையினின்று மனத்தை மறக்கும்படி செய்வதற்கு வெறும் காமகண்டனம் மாத்திரம் போதாது. இக்கருத்தை நன்ருய் ஞாபகத்தில்

வைத்துக்கொள்ளுங்கள். காமம் சக்தியுள்ளது, காமம் உக்கிரமானது, காமம் மகத்தானது. பலவீன மான மனமுள்ளவர்களால் காமம் அடக்கமுடியாமற் போகும். மாயையானது மனிதனைத் தன் வலையில் சிக்கவைக்கும். ஒருவன் மாயையின் பல்வேறு மார்க்கங்களைக்கூட அறிந்துக்கொள்ள வேண்டும்.

ஆடவனிடம் உள்ள கவர்ச்சிகரமான அம்சங்களில் எவை தன்னை மயக்கி ஆடவனுக்கு அடிமைப்படுத்துகின்றன என்பதை ஒரு ஸ்திரீ அறிந்துகொள்ள வேண்டும். இப்படியே, ஒரு ஸ்திரீயிடம் உள்ள கவர்ச்சிகரமான அம்சங்களை ஆடவன் ஒருவன் தெரிந்துகொள்ள வேண்டும். ஸ்திரீ ஆடவனை மயக்குகிறாள்; ஆடவன் ஸ்திரீயை மயக்குகிறான். ஸ்திரீயைத் தன் வலையில் அகப்படுத்திக்கொள்ள ஆடவனுக்குக்கூட அபார கவர்ச்சிகரமான அம்சங்கள் உண்டு. ஒரு ஆடவனின் பார்வைக்கு ஒரு ஸ்திரீ தோன்றுவதைக் காட்டிலும் ஒரு ஸ்திரீயின் பார்வைக்கு ஒரு ஆடவன் அதிக அழகாகத் தோன்றுகிறான். தன் உடை, கழுத்துப் பட்டி, புன்சிரிப்பு, அன்பின் வெளிப்பகட்டு, பார்வைகள், சைகைகள், புஷ்பங்களைப்போன்ற சொற்கள், கூந்தலை அலங்கரித்துக்கொள்ளுதல் இன்னும் பல தந்திரங்கள் கையாளுவதால், ஒரு மனிதன்கூட ஒரு ஸ்திரீயை வசியப்படுத்த முயலு கிறான்.

ஆடவனோ ஸ்திரீயோ சுய சோதனையும் சுய ஆராய்ச்சியும் செய்து பழகவேண்டும். காமம் எந்தெந்த வகைகளில் இயங்கி லீலை புரிகிற தென்பதையும், காமத்தைக் கிளறும் உணர்ச்சி களும் பொருள்களும் எவை என்பதையும் ஒருவன் காமத்திற்கு எந்த விதமாய் இரையாகிறான்

என்பதையும்பற்றி தக்கவாறு அவர்கள் தெரிந்து கொள்ளவேண்டும். அதன் பிறகுதான் காமத்தை அடக்குதல் சாத்தியமாகும்.

ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ தத்தாத்ரேயர், ஸ்ரீ ராமர், ஸ்ரீ துளசிதாஸ் ஆகியோர் எல்லோரும் ஸ்திரீகளைக் கண்டனம் பண்ணியிருக்கிறார்கள். இவ்வாறு கண்டனம் பண்ணியது பகைமை, துராபிமானம் அல்லது வெறுப்பு முதலிய காரணத்தால் அல்ல. சம்சாரமாகிய சதுப்பு நிலத்தினின்று மக்களை உயர்த்த வேண்டுமென்ற கருணையால்தான். ஸ்திரீகளைக் கண்டனம் பண்ணியதில் ஆடவரையும்கூட கண்டனம் பண்ணியது கலந்துள்ளது. லோகாயதர்களின் மனத்தினின்று புணர்ச்சிப் பாவத்தை அகற்றி, சிற்றின்ப நுகர்ச்சியின்மீது வெறுப்பையும், லோகாயதப் பொருள்களின் மேல் நிராசையையும் உண்டு பண்ணுவதற்கென்றே அவர்களுடைய கண்டனங்கள் குறிகொண்டுள்ளன. இதை மக்கள் தவறுதலாகக் கருதிவிட்டார்கள்.

ஆடவன் மிகவும் மோசமான குற்றவாளி. உண்மையில் அவன்தான் ஆசைகாட்டி மயக்குகிறான். அவனே ஆக்கிரமிக்கிறான். மீறி நடப்பவன் ஆகிறான். பெண்டிர் யாவரும் மீராக்களாகவும், மதாலாசாக்களாகவும், சுலபாக்களாகவும் ஆகியிருப்பார்கள். ஆடவனுடைய இந்த துர்நடத்தையில்லாவிட்டால் அவன் திருந்தி முதலில் மாற்றியமைக்கப்பட வேண்டியவன். பெண்டிரைப் போல், அவனிடத்தில் அவ்வளவு இச்சை அடக்கம் கிடையாது. ஆடவரைக்காட்டிலும் பெண்டிர்க்கு எட்டு மடங்கு அதிகமான காம விகாரம் உண்டு; ஆனால், சிற்றின்ப உணர்ச்சி அல்லது தூண்டுதலின் மீது அவர்களுக்கு எட்டு மடங்கு அதிகமாக அடக்கிக்கொள்ளும் சக்தி அமைந்துள்ளது. ஓர் பெண்ணைக் காட்டிலும் அதிகமான திடகாத்திரமும்

புத்திசாலித்தனமும் இருந்தாலும்கூட ஆடவனுக்கு இந்த ஒரு பலவீனம் இருந்துவருகிறது. ஆகையால் தான், மஹான்களும் மஹரிஷிகளும் ஆடவன் முன்னிலையில் பெண்ணினுடைய பயங்கரமான படத்தை வைத்தார்கள். சாதனையின் நோக்கை அடிப்படையாகக் கொண்டே இவ்வாறு செய்தார்கள். சாதகர்களுக்கு எச்சரிக்கை கொடுப்பதற்காகத்தானேயன்றி வேறல்ல. பெண்களுக்குக்கூட உண்மையில் இது ஓர் எச்சரிக்கை. அவர்களுக்கு ஆடவன் கவர்ச்சிக்குரிய காரணன் ஆகிருனல்லவா?

ஸ்ரீ தத்தாத்திரேயர் பெண்களை மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கிருர். ''இந்தப் பெண்ணை ஈஸ்வரன் ஏன் படைத்திருக்கிருன்?'' என்று கூறியுள்ளார். ஸ்ரீ ராமபிரானும் இதே மாதிரி அதிதீவிரமாகக் கண்டனம் பண்ணியுள்ளார். யோக வாசிஷ்டத்திலே வைராக்ய பிரகரணத்தைப் படித்துப்பாருங்கள். ஸ்ரீ ராமருடைய இதயத்தை உணருவீர்கள். 'முரசை கோல்களால் அடிப்பது போன்று, பெண்களை அடிக்கடி அடிக்கவேண்டியது அவசியமாகிறது'' என்று முழங்கியுள்ளார் துளசிதாஸ். ''பெண்கள் எப்போதும் கட்டுப் பாட்டில் வைக்கப்பட வேண்டியவர்கள்'' என்று மனு கூறியுள்ளார். இவற்றினின்று இந்தப் பெரியோர்கள் பெண்கள் ஜன்ம சத்துருக்கள் என்ற அவசரமான முடிவுக்கு நீங்கள் வந்து விடலாகாது. மற்ற பகுதிகளில், இவர்கள் பெண்களை அதிகபக்ஷ அளவுக்கு பெருமைப்படுத்திப் பாராட்டியுள்ளார்கள். ''அவர்கள் தேவதைகள், அவர்கள் வணங்கத்தக்கவர்கள்'' என்று கூறியுள்ளார்கள். அவர்கள் சிறந்த தெய்வீக புருஷர்கள். அவர்கள் கூறியுள்ளவற்றில் மிகுந்த கருத்து செறிந்துள்ளது.

பெண்டிருடைய மனங்கள் அதிகமாய் மாறு பட்டுக்கொண்டிருக்கும். ஹிந்து சாஸ்திரங்கள் பெண்களை மிகுந்த சபல சித்தம் படைத்தவர்கள் என்று வர்ணிக்கின்றன. ஷேக்ஸ்பியர் என்ற ஆங்கில மகா கவிஞர்கூட இப்படியே கூறியுள்ளார். இந்த வர்ணிப்பில் பெருத்த உண்மை உள்ளது. இது பெண்களுடைய மனோநிலை. அவர்கள் நன்கு பாதுகாக்கப்படவேண்டும். மிருதுத்தன்மையும், பொறுமையும், பணிவும், அடக்கமும், அன்பும், கண்ணியமும் மிகுதியும் படைத்தவர்கள். சேவா மனப்பான்மை அதிகம் உண்டு. இதை யாரும் மறுக்க முடியாது. இவை யாவும் அவர்களுடன் கூடப்பிறந்த விசேஷ அம்சங்கள்.

உலக இன்பங்கள் மிக்க கவர்ச்சி வாய்ந்தவை. சிற்றின்ப வாழ்வின் தோஷங்கள் உள்ளத்தை உறுத்தும் சொற்களில் பிரத்தியக்ஷமாகவும், பலமாகவும் வர்ணிக்கப்பட்டாலொழிய, வைராக்யம் ஒருவனுக்கு உதயமாகாது. உடல் எத்தகைய வஸ்துக்களால் ஆக்கப்பட்டுள்ளது என்கிற இயற்கைத் தன்மையை மனிதன் சதா காலமும் ஞாபகப்படுத்திக்கொண்டாலொழிய, உடல் மீதுள்ள பற்றை ஒருபோதும் நீக்கமுடியாது. மோஹம் அல்லது மாயையின் பிரம்மாண்டமான சக்தியின் காரணமாக, அவன் இதை ஒவ்வொரு செகண்டும் மறந்துவிடுகிறான். அவனுடைய புத்தி தடுமாறுகிறது. இந்த உடல் எத்தகைய பொருள் களினால் உற்பத்தி செய்யப்பட்டுள்ளது என்கிற கருத்தை ஒரு நிமிஷ நேரம் இடைவிடாமல் தொடர்ந்து அவன் நினைவிலிருத்திக்கொள்வானானல், தேகாத்யாஸம் அல்லது தேகத்தின் மீதுள்ள பற்றை அவன் எளிதாகக் களைந்துவிட முடியும். ஆடவன் தன் புத்திசாலித்தனத்தைப் பற்றி தற்புகழ்ச்சி பேசுகிறான். அவனிடம் புத்தி

கூர்மையும், தீவிரமான பகுத்தறிவும் சக்தியும் உண்டு. இவ்வளவும் இருந்துங்கூட, அவித்தையின் வன்மையினுல் மேற்கொள்ளப்பட்டவனும், அறியாமை என்ற ஆழமான பாதாளத்தில் வீழ்கின்ருன். இக்காரணம்பற்றியேதான், மகரிஷிகள், பகுத்தறிவை உண்டுபண்ணுவதற்காகவும், ஆத்மீய எழுச்சியைத் தோற்றுவிப்பதற்காகவும் தேகத்தைக் கண்டனம் புரியும் வழியை மேற்கொள்ளலானுர்கள்.

லோகாயத மனப்பான்மை படைத்தவர்கள் பற்றின்மைபற்றிய விவரமே அறியாதவர்கள். அத்தகையோர் வைராக்கியத்தின் தன்மையைப் பற்றியும் ஸ்ரீ தத்தாத்ரேயர், கபீர் இன்னும் இதர பெரியோர்களின் உபதேசங்களைப்பற்றியும் அறிந்து கொள்ளமாட்டார்கள். அதிதீவிர வைராக்கியமும், முமுக்ஷுத்துவமும் வாய்ந்த அக்கரையுள்ள சாதகர்களும், சுலபை, மீரா, கர்க்கி ஆகியவர்களைப் போன்ற புத்திசாலித்தனமான பெண்களுமே அவர்களுடைய உபதேசங்களின் உண்ஸ்மயான கருத்தைக் கிரகித்துக்கொள்வார்கள். இத்தகைய உபதேசங்கள் அவர்களுக்கு ஓர் பொக்கிஷமாயிருக்கும். அவற்றை ரக்ஷகார்த்தமாய் எப்போதும் வைத்துக்கொள்வார்கள். அந்த உபதேசங்களை தினந்தோறும் சிரத்தையுடன் கற்றுக்கொள்ள வேண்டும்.

''எந்த மஹானும் மஹரிஷியும் பெண்களைக் கண்டனம் பண்ணலாகாது. காலம் மாறிவிட்டது. பெண்கள் பெருந்தன்மை வாய்ந்தவர்கள்; தாய்மார்கள் சேவா மனப்பான்மை மிகுதியும் படைத்தவர்கள். பெண்களிற் சிலர் உயர்ந்த படிப்பாளிகளாக இருக்கிருர்கள்'' என்று படித்தவர்களில் சிலர் பகர்கின்றனர். ஆண்ரேர்களின்

அறவுரைகளின் உண்மையான கருத்தையும் உபயோகத்தையும் அவர்கள் உள்ளபடி கிரகிக்கக் கூடுமானல், ஆன்றோர்களின்மீது குறை கூறுவதற்கே இடம் இராது. அதற்குப் பதிலாக, அவர்களுடைய உபதேசங்களைப் பெரிதும் விரும்பியவர்களாய், அவைகளை அனுசரிக்கவும் செய்வார்கள்.

மிகுந்த வைராக்கியம் படைத்த நல்ல சாதகிகள் ஸ்திரீகளுக்குச் சாதனை என்பதுபற்றி ஆத்மீய நூல்களை இயற்றத் தொடங்கினுல், அவர்களும்கூட எச்சரிக்கைக் குறிப்பை நிச்சயமாகத் தீட்டுவார்கள். மேலும், ஆடவனிட்முள்ள பெண்களைக் கவர்ச்சிக்கின்ற வசீகரச் சக்திகளை — மாயையின் மோகன வசியங்களைப்பற்றி அவர்கள் தத்ரூபமாய் வர்ணித்து, ஆடவனின் வசியக் கண்ணிகளில் வீழாமல் தடுத்துக் காத்துக்கொள்ளுமாறு வற்புறுத்துவார்கள். இது பெண்களின் நன்னெறியிலே எழும் கண்ணிகளையும் படுகுழிகளையும் நீக்கிச் சாதனையில் முன்னேறுவதற்குத் துணைபுரிவதற்கேயன்றி வேறல்ல.

நவநாகரிக நாரீமணிகளில் சிலர், ''நாங்கள் கூட புத்தகங்கள் எழுதி ஆடவர்களைக் கடுமையாகக் கண்டனம் பண்ணுவோம்'' என்று கூறுகிறுர்கள். இது அவர்கள் செய்யும் தவறின் உச்சநிலை. பழிவாங்குகிற குணம் இது. சாஸ்திரங்களை உண்மையில் ஆழ்ந்து கற்றவர்களும், சிறந்த மஹாத்மாக்களின் இதயத்தையும் உணர்ச்சியையும் அறிந்தவர்களும், உண்மையாக ஆன்மீய மனப்பான்மை கொண்டவர்களும் இவ்வாறு ஒருபோதும் இயம்பமாட்டார்கள். இக் கண்டனம் பகைமையில் ஊறிவிடும். இது வைராக்யத்தையும் ஆன்மீய எழுச்சியையும் உற்பவிக்கச் செய்யாது. இனக்கவர்ச்சியும் அசுத்த எண்ணங்களும் நிர்மூலமாக வேண்டும்.

இவ்வாறு நிர்மூலமாக்குவதற்கு ஆடவனிடம் **சகோதரி பாவமும்** பெண்ணிடம் **சகோதர பாவமும்** வைத்துக்கொள்வதால் அவ்வளவு பலன் இல்லை. **சகோதரி பாவம்** அநேகரை ஏமாற்றி மோசஞ் செய்துள்ளது. எச்சரிக்கையில்லாமல் அசட்டையாயிருந்தால், தூய அன்பு என்பது எந்த நேரத்திலேனும் காமமாகிச் சீர்கேடு அடையும். நாகப்பாம்பு **பாவம்** மாத்திரமே சாதகர்களுக்குப் பெரிதும் துணைபுரியும். நாகப்பாம்பு பாவத்திற்குப் பிறகு, ஆடவனிடம் மாதுர்பாவமும், பெண்ணிடம் பிதுர்பாவமும் வந்தமையும். இறுதியில், இருபாலரிடமும் **ஆத்மபாவம்** வருகிறது. உண்மையில் உழைக்கும் சாதகர்கள் மாத்திரமே இதை நன்கு உணருவார்கள்; வெறும் வறட்டு வேதாந்திகள் அல்ல.

படித்த சில பெண்கள் பக்தர்களின் சத்சங்கத்தில் கலந்துகொண்டார்கள். அங்கே துளசிதாசரின் உபதேசங்கள் வாசிக்கக் கேட்டார்கள். ''முரசை கோல்களால் அடிப்பதுபோல, பெண்களுக்கும் அடி தேவைப்படுகிறது'' என்பது துளசிதாசரின் உபதேசம். உடனே சங்கத்தைவிட்டு வெளியே போனார்கள். துளசிதாசரின் உபதேசங்கள் வாசிக்கப்படுகிற எந்தச் சங்கத்திலும் போய்க் கலந்துகொள்வதில்லை என்று முடிவு கட்டினார்கள். எவ்வளவு பெரிய தவறு! எத்துணை பெருத்த நஷ்டம் அவர்களுக்கு! பெண்களிடத்தில் ஏதேனும் விரோத மனப்பான்மை கொண்டவரா துளசிதாசர்? துளசிதாசருடைய உபதேசங்களின் உண்மையான கருத்தைத் தெரிந்து கொண்டார்களா? துளசிதாசர் ஓர் சிறந்த பக்தர், பெரிய மஹான், மகாகவி. அவரைப்போன்ற மஹாபுருஷரை இந்தியா அதற்குமுன் உற்பத்தி பண்ணியதே கிடையாது. யாவருடைய இதயங்

களிலும் அவர் வாசம் புரிகிறார். எல்லோராலும் தெய்வமாகப் போற்றப்படுகிறார். அவருடைய சுலோகம் ஒன்று மாத்திரமே மனிதர்களுடைய புண்பட்ட இதயங்களை ஆற்றியும், அவர்களை மேலே உயர்த்தியும், உற்சாக மூட்டியும், வழிகாட்டியும் ஆறுதல் பண்ணியும் வருகிறது. இத்தகைய துளசி தாசரின் இதய நோக்கத்தை இப்பெண்மணிகள் தெரிந்துகொண்டார்களா? இவருடைய இராமா யணம் பாராயணம் செய்யப்படும் சத்சங்கத்தில் இப்பெண்மணிகளோ ஒருவேளை இந்தியாவிலுள்ள எல்லாப் பெண்களோ கலந்துகொள்ளாமல் நின்று விட்டார்களானால், ஸ்ரீ துளசிதாசருடைய சிஷ்யர் களும், பாராட்டுகிற அன்பர்களும் எண்ணிக் கையில் குறைந்து விடுவார்களா? பெண்மணிகள் நன்கு ரக்ஷிக்கப்படவேண்டும். சீதை, ராதை, சாவித்திரி, அனுசூயை, நளாயினி ஆகிய பதிவிரதைகள் போன்று ஜ்வலிக்க வேண்டும். நன்னடத்தையில்லாத பெண்களைத் திருத்தியும் கல்வி புகட்டியும் புத்திசாலிகளாகச் செய்ய வேண்டும். இதைத்தான் அவர் குறிப்பிட்டார்.

மஹாத்மாக்களின் உபதேசங்களின் உண்மையான கருத்தையும், வைராக்கியத்தின் உண்மையான மதிப்பையும் உணர்ந்துகொள் வதற்கு உகந்த இதயமும், வைராக்கியமும், விவேக மும், சூட்சுமபுத்தியும் நீங்கள் எல்லோரும் பெற்று விளங்குவீர்களாக.

## 12. உத்தமிகளின் வாழ்க்கை வரலாறு

### (அ) காந்தாரி

கந்தர்வ தேசத்து மன்னர் ராஜாசுலப் என்பவருடைய குமாரத்தி காந்தாரி. ஆப்கானிஸ் தானத்தில் இப்போது காண்ட்ஹார் என்று வழங்கப்பட்டுவரும் பிரதேசமே கந்தர்வதேசம்.

மஹாபாரத காலத்திலே, இந்தியா முழுமையும் ஆரியர்களால் அரசாளப்பட்டு வந்தது. இந்தியாவில் இதர பரம்பரையோ. கோட்பாடோ மதமோ இல்லை. நற்குணம் வாய்ந்த நல்ல அழகியாக இருந்தாள் காந்தாரி. தெய்வீகப் பண்பாடுகள் கைவரப்பெற்றவள். இளமைப் பருவத்தில், அவள் சிவபெருமானைச் சிந்தித்துப் பூஜை செய்து தவம் புரிந்தாள். அவளுடைய பக்திக்கு வியந்து மகிழ்ந்து சிவபெருமான் நூறு குழந்தை பிறக்கும்படியான வரத்தை அளித்தார்.

குரு வம்சத்திலே **திருதராஷ்டிரன்** என்பவன் மூத்தவன். ஆனால் குருடன். அதனால், அவனுடைய இளைய சகோதரன் **பாண்டு** என்பவன் பீஷ்மருடைய போதனையின் பேரில் ராஜ்யத்தை அரசாண்டான். குருடனானாலும், திருதராஷ்ட்ரனுக்குச் சகலவித தர்மசாஸ்திரங்களும், வேதங்களும், புராணங் களும், தனுர் வித்தையும்கூடத் தெரியும்.

கந்தர்வதேசத்து மன்னருக்குப் புத்திரி ஒருத்தி உண்டென்பதையும் பரமேஸ்வரரிடமிருந்து நூறு புத்திர சந்தான வரத்தை அவள் பெற்றவ ளென்பதையும் பீஷ்மர் அறிந்தவுடனே, அவர் மன்னரின் புதல்வியை குடும்பத்துக்கு மூத்த குமாரனுயுள்ள திருதராஷ்ட்டிரனுக்கு மணஞ் செய்து தருமாறு வேண்டினார். குருராஜ்யத்தின் பெருமையைப்பற்றியும், குருவம்ச பரம்பரையி லுள்ளவர்களின் வீரதீரச் செயல்களைப்பற்றியும் ஆராய்ந்தபின், பிறவிக்குருடன் என்று தெரிந்தும் திருதராஷ்டிரனுக்குத் தமது புதல்வியை விவாகம் செய்துகொடுக்கத் தீர்மானித்தான் ராஜாசுலப்.

பிறவிக்குருடனை திருதராஷ்டிரனுக்குத் தான் வாழ்க்கைப்பட வேண்டியதென்பதை அறிந்த உடனே காந்தாரி தன் கண்களைத் துணியால் இறுகக்

கட்டிக்கொண்டவளாய், ''என் கணவர் குருடர். உலகத்திலுள்ள பொருள்களை முற்றிலும் அனுபவிக்க முடியாது. நானும்கூட, ஆரியப் பெண் என்கிற முறையில், என் கணவர் அனுபவிக்க முடியாத அத்தனை சுகங்களையும் நீக்கி வாழ வேண்டும். சாஸ்திரங்களின் போதனைப்படி வாழ்க்கை நடத்துதல் வேண்டும். என் முன்னோர் களின் காலடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டும். எங்கள் குடும்ப கௌரவத்தை நான் நிலைநாட்ட வேண்டும்'' என்று கூறினாள். குருடியைப் போலவே அவள் தனது வாழ்க்கை முழுதும் ஒழுகி வந்தாள். அப்படியிருந்தும், அவள் தன் கணவருக்கும் மூத்தோருக்கும் எல்லாவிதமான தொண்டுகளையும் ஆற்றிக்கொண்டு வந்தாள்— வேலைக்காரர்களைக்கொண்டு. அவளுடைய சீரிய குணம், பெருந்தன்மையான ஒழுக்கம், சோர்வடையாத தொண்டு முதலியவற்றிற்காக அவளுடைய கணவனும் குருகுடும்பத்திலுள்ள எல்லா அங்கத்தினர்களும் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

உண்மையில் அவள் ஓர் பதிவிரதா சிரோன்மணி. இலட்சியத்தையும் தெய்வீகப் பண்பாடுகளையும் கொண்டவள் அவள். இலட்சிய மாது என்பதற்கு அவள் ஓர் உருவகமாய்த் திகழ்ந்தாள். ஒவ்வொரு மாதும், மகிழ்ச்சியோடு வாழ விரும்பினால், இவளுடைய உதாரணத்தைப் பின் பற்ற வேண்டும்.

காந்தாரியின் கதையை மேலும் சொல்லுகிறேன். குருக்ஷேத்திரப் போரின்போது, அவர்கள் பகற்பொழுது மாத்திரமே போர் செய்தார்கள். சூரிய அஸ்தமனத்திற்குப்பின் யுத்தம் நிறுத்தப் பட்டபோது, இருதிறத்தாரிடையில் பகைமை என்பதே கிடையாது. அவர்கள் ஒருவரோடு ஒருவர்

அளவளாவி க்ஷேமலாபங்களைப்பற்றி விசாரித்துக் கொள்வார்கள். அந்தக்காலத்தில் ஒவ்வொரு துறையிலும் தர்மம் அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. உண்மை என்பதற்குச் சரியான உருவமாய் யுதிஷ்டிரர் விளங்கினார். அவர் எப்போதும் உண்மையே பேசினார்—உயிருக்கு ஊறு விளையினும் கூட. இக்காரணம்பற்றியேதான் அவர் **தர்மராஜா** என்று வழங்கப்பட்டு வந்தார். இதற்கு அநேக சான்றுகள் உண்டு. யுதிஷ்டிரரின் உண்மை பேசும் பண்பும், காந்தாரியின் பதிவிரதாத் தன்மையும் விளக்கும்படியான ஓர் சம்பவத்தைக் கூறுகிறேன்.

ஒரு நாள், பீஷ்மர், கர்ணன், துரோணன் ஆகிய தனது யுத்த தளகர்த்தர்கள் யாவரும் காயமடைந்தும் இறந்துபட்டும் போகவே, துரியோதனன் யுதிஷ்டிரரிடம் சென்று ''அண்ணா! எந்தவித ஆயுதமும் ஊடுருவிப்பாயாவண்ணம் அவ்வளவு கடினமானதாய் எனது சரீரம் ஆவதற்கு ஏதாவது வழி உனக்குத்தெரியுமா?'' என்று வினவினான். யுதிஷ்டிரர் கபடமில்லாமல், ''ஆம், தம்பி! எதுவும் சரீரத்திற்கு ஊறு செய்யாதவாறு உன் சரீரம் வஜ்ரம்போல் ஆவதற்கு வழி உண்டு. உன் தாயார் ஒப்பற்ற பதிவிரதா சிரோன்மணி. தன் கணவனார் குருடர் என்று அறிந்த க்ஷணம் தொட்டு, அவள் தன் கண்களைக் கட்டிக் கொண்டாள். சீரிய பதிவிரதாத் தன்மையினின்று, அவள் தன் பார்வையில் மஹத்தான சக்தியைப் பெற்றுள்ளாள். அவள் யாரையாவது பார்த்தால், பார்க்கப்பட்டவனுடைய சரீரம் வஜ்ரம்போலக் கடினமானதாகும். எந்த ஆயுதமும் தீங்கு புரியாது-அவ்வளவு சக்தி அப்பார்வையில் உள்ளது. ஆகையால் வீட்டுக்குப்போய் உன் ஆடைகளைக் களைந்துவிட்டு, கண் திறந்து பார்க்கும்படி உன் தாயாரைக்கேள். இது ஒன்றுதான் வழி. இங்ஙனம்

நீ செய்தால், வஜ்ரம்போல் ஆவாய்'' என்று வெளிப்படையாகக் கூறினர். துரியோதனன் அங்ஙனம் செய்வதாக வாக்குறுதி செய்தான்.

இச் செய்தி அர்ஜுனனுக்கு எட்டியது. உடனே இதைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் கூறினர். இதன்படி நடக்குமானல், அவர்களுடைய முயற்சிகள் எல்லாம் வீணுகி, யுத்தத்தில் பாண்டவர்கள் வெற்றி காண முடியாமற்போகுமே என்று பகவான் சிந்தித்தார். துரியோதனனுக்கு பூஜைக்காகத் தினசரி புஷ்பங்களும் பூமாலைகளும் கொண்டுவந்துதரும் தோட்டக்காரனைப்போலவே, ஸ்ரீ கிருஷ்ண பகவான் வேடந்தரித்தார். அரண்மனைக்குத் திரும்பிப்போகிற சமயம் துரியோதனனை வழியில் அவர் சந்தித்தார். தகுந்த மரியாதைகளைச் செலுத்திய பிறகு, ''போர் செய்வதற்குப் பயப்படுகிறீர்களா? உயிரைக் காப்பாற்றிக்கொள்ள விரும்புகிறீர்களா?'' என்று தோட்டக்காரன்போல் வேடந்தரித்த கிருஷ்ண பகவான் துரியோதனனைக் கேட்டார். அதற்குத் துரியோதனன் தனக்கும் யுதிஷ்டிரருக்கும் நடந்த சம்பாஷணைகளைப்பற்றிக் கூறிவிட்டுத் தான் யுத்தத்திற்குப் பயப்படவில்லை என்று முடித்தான். தோட்டக்காரன், ''யஜமானரே! நீங்கள் உங்களைக் காட்டிக்கொடுத்து விட்டீர்கள். உங்கள் சொந்த தீர்ப்பின் சக்தியை இழந்து விட்டீர்கள். யுதிஷ்டிரன், சத்திய நெறியைக் கடைப்பிடிக்கும் புனிதராஞலும் தங்களுக்கு எதிரி மனிதர்தானே! தங்கள் ராஜ்யத்தை அடைய விரும்புகிருர். அதனல் இந்த தந்திரத்தைக் கையாண்டுள்ளார். தங்கள் தாயார் முன்னிலையில் ஆடைகளில்லாமல் (நிர்வாணமாக) போனல், அவர்கள் தங்களைச் சபித்துவிடுவார்கள். அவர்கள் பார்வைபட்ட மாத்திரத்திலே தங்கள் உடம்பு எரிந்து சாம்பலாகி

விடும்'' என்று சாங்கோபாங்கமாய்ச் சாற்றினன். இதைக்கேட்டதும் துரியோதனனுக்கு கதிகலங்கி விட்டது. ''உன் யோசனையைக்கூறு'' என்று கேட்டான் துரியோதனன். தோட்டக்காரனை ஸ்ரீ கிருஷ்ண பகவான், ''தங்களுக்கு இப்பூமாலையைத் தருகிறேன். இதை இடையைச்சுற்றி அணிந்துகொண்டு உன் தாயாரிடம் போகலாம்'' என்று கூறினர். துரியோதனன் அப்படியே செய்தான்.

துரியோதனன் அரண்மனைக்குள் போய்த் தன் தாயார் முன்பு சாஷ்டாங்கமாகத் தண்டனிட்டான். அகாலமாய் அவன் வருவதைக் கண்டு ஆச்சரியப்பட்டாள் காந்தாரி. ''என் மகனே! என்னை அவமானப்படுத்திவிட்டாய். க்ஷத்திரியனுக்குப் புத்திரனுயிருந்தும் அவமானந் தரத்தக்க இச் செயலைப் புரிந்தாயே! போர்க்களத்தினின்று நீ ஓடிவந்து விட்டாயே'' என்று கண்டித்தாள். (ஆரியத் தாயாரின் வீரக்கோட்பாட்டையும் தர்மத்தையும் அவர்கள் எவ்வாறு மதித்தார்கள் என்பதையும் கவனியுங்கள்) துரியோதனன், 'தாங்கள் கூறுவது தவறு. யுத்தகளத்தினின்று ஓடிவரவில்லை. மரணத்திற்குப் பயப்பட்டவனல்ல'' என்று பதிலிறுத்தான். அப்பால், நடந்த வரலாற்றை நவின்றான். பின்பு ஆடைகளைக் களையுமாறு கேட்டாள். ஆனல், ஏற்கனவே களைந்தாகி விட்டனவென்று துரியோதனன் பதில் கூறினன். அவள் கண்களைத் திறந்தாள். உடலைப் பார்த்தாள். துரியோதனன் பூமாலை அணிந்துள்ள இடைப்பாகந் தவிர இதர அவயவங்கள் யாவும் வஜ்ரம்போல் கடினமாகிவிட்டன. உடலிலுள்ள எல்லாவற்றையும் ஏன் களையவில்லை என்று காந்தாரி கேட்க, துரியோதனன் தனக்கும் தோட்டக்காரனுக்கும் நடந்த சம்பாஷணையைப்பற்றி விவரித்தான்.

அவன் உண்மையான தோட்டக்காரன் அல்ல வென்றும், தன் பக்தர்களை ரக்ஷிக்கும் பொருட்டு தோட்டக்காரன்போன்று மாறுவேடத்தில் வந்த ஸ்ரீ கிருக்ஷ்ண பகவான்தான் என்றும் காந்தாரி கூறினள். காந்தாரியினுடைய பதிவிரதாத் தன்மையின் சக்தியையும் மஹிமையையும் பற்றி கவனியுங்கள். பீமன் துரியோதனனைத் தொடையை முறித்துக்கொன்ருன் என்பதை நீங்கள் எல்லோரும் அறிந்திருப்பீர்கள் (தொடைப்பாகம் இதர அவயவங்கள் போன்று வஜ்ரமாக மாறவில்லை).

## (ஆ) தூய காதரைன்

**காதரைன்** என்னும் கிறிஸ்துவ மாது தூய்மையாயும் பக்தி வாய்ந்தவளாயும் இருந்தாள். இத்தாலி தேசத்து **மீராவாக** விளங்கினுள் அவள். ஆண்டவனுடைய திருப்பணிக்கு அவள் தனது வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தாள். மாமிசத்தையும் திராக்ஷரசக் கள்ளையும் அவள் தொடக்கூட கிடையாது. அவள் தனது குழந்தைப் பருவத்திலிருந்தே, ஆண்டவன் தரிசனத்தைப் பெறவேண்டுமென்ற பலமான அவாவைக் கொண் டிருந்தாள். பதினெட்டாம் வயதிலேயே தீக்ஷை பெற்ருள். அவள் மூன்று ஆண்டு பூரண மௌன விரதத்தை அனுஷ்டித்தாள். அன்பு, சுயநலமற்ற தொண்டு, தியாகம் ஆகிய நற்பண்புகளுக்கெல்லாம் அவள் ஓர் சின்னமாக விளங்கினுள். பக்தியும் விரக்தியும் நிறைந்தவள். அன்பு, தொண்டு, தியாகம் ஆகியவை அவளுடைய மூலபிரதிக்ஞை. முப்பத்து மூன்ருவது வயதிலே அவள் இறந்தாள். அவளுடைய இறுதி வார்த்தைகள் ''ஓ, பகவானே! தங்கள் பாதத்திற்கு அடியேனைச் சமர்ப்பிக் கின்றேன்'' என்பவை.

தூய **காதரைன்** எவ்வளவு பெருந்தன்மையும் பக்தியும் நிறைந்த ஆத்மாவைப் படைத்தவள்! உலகத்திய ஆசா பாசங்களிடையில், தூய தெய்வீக வாழ்க்கையை நடாத்திய இவளைப் போன்ற மகோன்னத ஆத்மாக்களின் பெருமையே பெருமை! ஓ! பெண்மணிகளே! தூய காதரைனின் வழ்க்கையி லிருந்து ஆவேசத்தைப் பெற்று, அவளைப் பின்பற்றி அன்பு, சேவை மனப்பான்மை, தியாகம் ஆகியவை உங்கள் மூல பிரதிக்ஞையாகக் கொண்டு, பக்தியும் பெருந்தன்மையும் நிறைந்த வாழ்க்கையை நடத்துவீர்களாக. நாகரிகத்தை விட்டுவிடுங்கள். எளிமையாயும், பணிவாயும், பக்தியாயும் இருந்து வாழ்வீர்களாக.

## (இ) தூய எலிஜபெத்

தூய **எலிஜபெத்** என்னும் மாது சிரோன்மணி ஹங்கேரி தேசத்து இளவரசி. குழந்தைப் பருவத்தி லிருந்தே அவள் மகரிஷிகள், மஹான்கள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைக் கேட்பது வழக்கம். லோகாயாத வாழ்க்கையினிடத்து அவளுக்கு எவ்விதக் கவர்ச்சியும் கிடையாது. தனது அரசாங்கவாழ்க்கையில் சிரத்தை இல்லை. விரக்திமயமாயும் பக்திவசமாயும் இருந்து வந்தாள். எலிஜபெத்தின் கணவனாகிய **லூயி** என்பவரை **ஹென்றி** என்பவர் சிங்காதனத்தி னின்று நீக்கினார். லூயி எலிஜபெத்தைக் குழந்தைகளுடனே தேசப்பிரஷ்டம் செய்தார். பிச்சைக்காரியாக எலிஜபெத் வாழலானாள். கடுமையான துரதிர்ஷ்ட நிலைகளிலும்கூட, அவளுக்கு ஆண்டவனிடம் கொஞ்சமேனும் சந்தேக மில்லாத பூரண பக்தி ததும்பியிருந்தது. இது அவளுக்குப் பெருத்த ஆறுதலையும், திருப்தியையும், ஆனந்தத்தையும் உண்டுபண்ணிற்று. மரணப்

படுக்கையிலிருந்தபோது, ''எலிஜா, இப்போது தயாராயிரு; புறப்படவேண்டியவேளை வந்து விட்டது'' என்ற ஓர் குரலோசையை அவள் கேட்டாள். எலிஜபெத் இளவரசி பிச்சைக்காரி ஆனாள். பல்வேறு அவஸ்தைகளைப்பட்டாள். ஆனால், பகவானுடைய திருவருள் அவளுடைய அவஸ்தைகளையெல்லாம் பெருமையுடன் சகித்துத் தாங்கிக் கொண்டிருந்தது. ஏழ்மையின் கொடுமைகளை அவள் உணர்ந்தபாடில்லை. அவள் சதா சந்தோஷகரமாயும் உற்சாகமாயும் விளங்கினாள்.

## (ஈ) கெலியான் சீமாட்டி
## (GELYOEN)

இவள் பிரான்சு தேசத்தில் பிறந்தாள். இவளுடைய பக்திக்காகவும் புனிதத்தன்மைக்காகவும் ஐரோப்பா முழுதும் இவளைப்போற்றி மரியாதை செய்தது. ஆண்டவனுடைய தரிசனம் கெலியான் சீமாட்டிக்குக் கிடைத்தது. அப்போது அவள், ''தெய்வீக அன்பு என் இதயத்தில் நிறைந்து கொண்டது. பக்தி என்னும் அமிர்தத்தை நான் பருகி, ருசி பார்க்கிறேன். நீங்கள் என் இதயத்தில் குடிகொண்டிருந்தீர்கள். வெளியே தங்களை வீணாகத் தேடினேன். தங்களை எங்கும் நான் காண்கிறேன். இப்பிரபஞ்சம் முற்றிலும் தங்கள் சந்நதியாகவே விளங்கிக்கொண்டிருக்கிறது. தங்களுடைய தரிசனத்தினால் என்னுடைய துயரங்களெல்லாம் மறைந்தோடின. மஹிமைவாய்ந்த மஹேஸ்வரா! என்னைத் தாங்கள் அனுக்கிரகித்தீர்கள்'' என்று தன்னுடைய உணர்ச்சிகளையெல்லாம் வெளிப்படுத்தினாள். அவளுடைய மன பரிபாகத்தை கவனியுங்கள். குழந்தைகள் இறந்தன. அவற்றிற்காக அவள் கண்ணீர் சிந்தவில்லை. அவள் ''ஆண்டவன் கொடுத்தார். அவைகளை அவர் எடுத்துக்

தூய **காதரைன்** எவ்வளவு பெருந்தன்மையும் பக்தியும் நிறைந்த ஆத்மாவைப் படைத்தவள்! உலகத்திய ஆசா பாசங்களிடையில், தூய தெய்வீக வாழ்க்கையை நடாத்திய இவளைப் போன்ற மகோன்னத ஆத்மாக்களின் பெருமையே பெருமை! ஓ! பெண்மணிகளே! தூய காதரைனின் வழ்க்கையிலிருந்து ஆவேசத்தைப் பெற்று, அவளைப் பின்பற்றி அன்பு, சேவை மனப்பான்மை, தியாகம் ஆகியவை உங்கள் மூல பிரதிக்கினையாகக் கொண்டு, பக்தியும் பெருந்தன்மையும் நிறைந்த வாழ்க்கையை நடத்துவீர்களாக. நாகரிகத்தை விட்டுவிடுங்கள். எளிமையாயும், பணிவாயும், பக்தியாயும் இருந்து வாழ்வீர்களாக.

## (இ) தூய எலிஜபெத்

தூய **எலிஜபெத்** என்னும் மாது சிரோன்மணி ஹங்கேரி தேசத்து இளவரசி. குழந்தைப் பருவத்திலிருந்தே அவள் மகரிஷிகள், மஹான்கள் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைக் கேட்பது வழக்கம். லோகாயாத வாழ்க்கையினிடத்து அவளுக்கு எவ்விதக் கவர்ச்சியும் கிடையாது. தனது அரசாங்கவாழ்க்கையில் சிரத்தை இல்லை. விரக்திமயமாயும் பக்திவசமாயும் இருந்து வந்தாள். எலிஜபெத்தின் கணவனுகிய **லூயி** என்பவரை **ஹென்றி** என்பவர் சிங்காதனத்தினின்று நீக்கினார். லூயி எலிஜபெத்தைக் குழந்தைகளுடனே தேசப்பிரஷ்டம் செய்தார். பிச்சைக்காரியாக எலிஜபெத் வாழலானாள். கடுமையான துரதிர்ஷ்ட நிலைகளிலும்கூட, அவளுக்கு ஆண்டவனிடம் கொஞ்சமேனும் சந்தேகமில்லாத பூரண பக்தி ததும்பியிருந்தது. இது அவளுக்குப் பெருத்த ஆறுதலையும், திருப்தியையும், ஆனந்தத்தையும் உண்டுபண்ணிற்று. மரணப்

படுக்கையிலிருந்தபோது, ''எலிஜா, இப்போது தயாராயிரு; புறப்படவேண்டியவேளை வந்துவிட்டது'' என்ற ஓர் குரலோசையை அவள் கேட்டாள். எலிஜபெத் இளவரசி பிச்சைக்காரி ஆனாள். பல்வேறு அவஸ்தைகளைப்பட்டாள். ஆனால், பகவானுடைய திருவருள் அவளுடைய அவஸ்தைகளையெல்லாம் பெருமையுடன் சகித்துத் தாங்கிக் கொண்டிருந்தது. ஏழ்மையின் கொடுமைகளை அவள் உணர்ந்தபாடில்லை. அவள் சதா சந்தோஷகரமாயும் உற்சாகமாயும் விளங்கினாள்.

## (ஈ) கெலியான் சீமாட்டி

## (GELYOEN)

இவள் பிரான்சு தேசத்தில் பிறந்தாள். இவளுடைய பக்திக்காகவும் புனிதத்தன்மைக்காகவும் ஐரோப்பா முழுதும் இவளைப்போற்றி மரியாதை செய்தது. ஆண்டவனுடைய தரிசனம் கெலியான் சீமாட்டிக்குக் கிடைத்தது. அப்போது அவள், ''தெய்வீக அன்பு என் இதயத்தில் நிறைந்து கொண்டது. பக்தி என்னும் அமிர்தத்தை நான் பருகி, ருசி பார்க்கிறேன். நீங்கள் என் இதயத்தில் குடிகொண்டிருந்தீர்கள். வெளியே தங்களை வீணாகத் தேடினேன். தங்களை எங்கும் நான் காண்கிறேன். இப்பிரபஞ்சம் முற்றிலும் தங்கள் சந்நதியாகவே விளங்கிக்கொண்டிருக்கிறது. தங்களுடைய தரிசனத்தினால் என்னுடைய துயரங்களெல்லாம் மறைந்தோடின. மஹிமைவாய்ந்த மஹேஸ்வரா! என்னைத் தாங்கள் அனுக்கிரகித்தீர்கள்'' என்று தன்னுடைய உணர்ச்சிகளையெல்லாம் வெளிப்படுத்தினாள். அவளுடைய மன பரிபாகத்தை கவனியுங்கள். குழந்தைகள் இறந்தன. அவற்றிற்காக அவள் கண்ணீர் சிந்தவில்லை. அவள் ''ஆண்டவன் கொடுத்தார். அவைகளை அவர் எடுத்துக்

கொண்டார். அவருடைய திவ்ய நாமத்தின் பெருமை விளங்குவதாக!'' என்று தைரியமாகப் பேசினாள். மத சம்பந்தமான உறுதியான கோட்பாட்டிற்காக அவள் சிறையிலிடப்பட்டாள். ''பலமான சகிப்புத்தன்மை அடையப்பெருதவனுக்கு ஈஸ்வர சாக்ஷாத்காரம் கிடைப்பது துர்லபம்'' என்று கூறினாள். அறுபதாவது வயதில் அவள் இயற்கை எய்தினாள். ''ஏ! கடவுளே! தங்கள் இஷ்டம் நிறைவேறுவதாக! நான் தங்களைச் சார்ந்தவள். எல்லாம் தங்களுடையது. என்னிடத்திலிருப்பவை யாவும், தங்களிடமிருந்தே வந்துள்ளன. எல்லாவற்றையும் தங்களுக்குச் சமர்ப்பிக்கின்றேன்'' என்று அவளுடைய இறுதிக் காலத்தில் பகர்ந்தாள்.

## (உ) தூய தெரீஸா

இவள் ஓர் பிரசித்திபெற்ற கிறிஸ்துவ மாது. தன் வாழ்க்கையை இறைவனுக்கு அர்ப்பணித்தாள். பெருந்தன்மையான பக்தி நிறைந்த வாழ்க்கையை அவள் நடத்தினாள்.

## (ஊ) ஸ்ரீ ஆண்டாள்

பக்தி வாய்ந்த தூய பெண்மணி அவள். திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீவில்லிப் புத்தூரில் அவதரித்தாள். தென்னிந்தியாவில் பிரசித்திபெற்ற ஆழ்வார்களில் பிராமண குலத்தைச் சேர்ந்த **விஷ்ணுசித்தர்** என்பவரால் வளர்க்கப்பட்டாள். பகவானிடம் தீவிர பக்தி பூண்டொழுகினாள். ஆண்டாள் வளர்ப்புத் தந்தையிடமிருந்து தெய்வபகதிப் பெருக்கை ஊட்டப் பெற்றாள். கோபிகள் தங்கள் அன்பை ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் சமர்ப்பித்ததுபோல், ஸ்ரீ ஆண்டாள் தனது அன்பை ஆண்டவனிடம் சமர்ப்பித்தாள்.

மாதுர்ய பாவத்தைக் கையாண்டாள். மயிர் சிலிர்த்து உள்ளத்தைத் தொடும் தன்னுடைய பாக்களாலும் செய்யுட்களாலும் மாதுர்ய பாவத்தின் உணர்ச்சிகளை விளக்கினுள். ஸ்ரீ ரங்கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ரங்கநாதசுவாமி களின் உத்தரவுப்படி அவள் ஸ்ரீ ரங்கநாத சுவாமிக்கு மணமகளாக வாழ்க்கைப்பட்டாள். ஸ்ரீ ரங்கநாத சுவாமிகளின் கோவிலை நோக்கி மாபெரும் விவாக ஊர்வலம் ஒன்று புறப்பட்டது. ஸ்ரீ ஆண்டாள் கோப்பிய ஸ்தானம் வாய்க்கப்பெற்றுள். சேஷ சயனத்தில் புகுந்தாள். பக்தையும் பகவானும் இரண்டறக் கலந்தார்கள். அவள் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியோடு ஐக்கியமானுள். ஸ்ரீ ஆண்டாளின் வாழ்க்கையின் லக்ஷியம் நிறைவேறிவிட்டது. பகவானிடம் செலுத்திய பக்தியின் பெருமையை ஸ்ரீ ஆண்டாள் உலகத்தவர்க்கு நிதர்சனமாக நிரூபிக்கிறுள்.

## 13. தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

### 1. பெண்கள் பகுதி

தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் நிகழ்ச்சி களிலே பெண்மணிகள் கூட பங்கெடுத்துக் கொள்கிறுர்கள். பெண்மணிகளுக்கென்றே செய லாற்றும் சில கிளைச் சங்கங்கள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் உண்டு. கிளைச் சங்கங்களை ஆரம்பிக்க விரும்புவோர், ஹிருஷிகேஸ், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் தலைவருக்கு எழுதலாம்.

பெண்கள், ஸ்திரீகள் ஆகியோரின் க்ஷேமத்தில் ஸ்ரீ சிவானந்த மஹராஜ் அவர்கள் மிகுந்த கவனம் செலுத்துகிறுர்கள். பெண்களும் ஸ்திரீகளும் தத்தம் தினசரி ஆத்மீகக் குறிப்புக்களையும் மந்திரம் எழுதப்பட்ட நோட்டுப் புத்தகங்களையும் ஒழுங்காக

சுவாமிகளுக்கு அனுப்புகிறார்கள். சுவாமிகள் அவைகளைக் கவனமாகப் பார்த்து, போதனைகளை எழுதி அனுப்புகிறார்கள். தினசரி ஆத்மீகக் குறிப்புக்களையும், மந்திரங்களையும் எழுதுவோர் அந்த நோட்டுப் புத்தகங்களை சுவாமிகளுக்கு ஒவ்வொரு மாதக் கடைசியிலும் ஒழுங்காக அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். ஹிருஷிகேஸ், தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தலைமைக் காரியாலயத்திலிருந்து, தினசரி எழுத உபயோகமாகும் ஆத்மீகக் குறிப்புக்களும், ஆத்மீக தீர்மானங்களும் கொண்ட அச்சிட்ட பிரதிகளை எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். தினசரி குறிப்புத் தாள்களுக்கும் பதில் எழுதுவதற்கும் போதிய தபால் தலைகள் தயவுசெய்து வைத்தனுப்பவும்.

கிறிஸ்துமஸ், ஈஸ்டர் விடுமுறை நாட்களில் நடைபெறும் சாதனை வாரங்களில் பெண்மணிகள் கலந்து கொள்ளலாம். அவர்களுக்குப் பிரத்தியேகமான இடவசதியும் போஜன வசதியும் செய்து கொடுக்கப்படும். அவர்கள் குறிப்பிட்ட கால வரையறைக்குள் காரியதரிசிக்கு எழுதி அனுமதி பெற்றாக வேண்டும். நிகழ்ச்சிகளிலே கலந்து கொள்வோர் மிகவும் நன்மையடைவார்கள். ஐக்கிய தியானம், பக்தி, யோகம், வேதாந்தம் ஆகியவை பற்றி உபன்யாசங்கள், ஆத்மீய சாதனைகள், மந்திரம் எழுதுதல், பிரார்த்தனை, கீர்த்தனை, பஜனை, கீதை, உபநிஷத்துக்கள் முதலியவைப்பற்றி சொற்பொழிவுகள்—இவை யாவும் நிகழ்ச்சிநிரலில் இடம்பெறும்.

வருடந்தோறும் நடைபெறும் சில ''வியாசப் போட்டிகளில்'' பெண்மணிகள் கலந்துகொள்ளக் கூடும். சிறந்த எழுத்தாளருக்குப் பரிசுகள் வழங்கப்படும்.

## 2. ஹிந்துக்களின் தர்ம சாஸ்திரம் மீறவொண்ணுத பவித்திரம் வாய்ந்தது

தற்கால ஹிந்து தர்ம சாஸ்திரத்திலே செய்யப் பட்டுள்ள பெருவாரியான சீர்திருத்தங்கள் ஹிந்து மக்களின் கலாசார, சமுதாய முற்போக்குக்கு முட்டுக்கட்டை போடுகின்றன. தொன்றுதொட்டு வழங்கிவரும் ஹிந்துக்களின் சம்பிரதாயங்களுக்குப் பாதகமாயுள்ள எந்த சட்ட நிரூபணமும் சகிக்கக் கூடியதன்று. ஹிந்துக்களில் உள்ள பல்வேறு பிரிவுகளுள் ஒற்றுமை பரப்பவேண்டுவதற்கான சீர்திருத்தங்கள் ஹிந்துக்கள் கொண்டுவரவேண்டு மென்று நான் உறுதியாக அபிப்பிராயப்படுகிறேன். இவற்றிற்கு எத்தகைய சாத்தியமான வழிகளையும் கையாளவேண்டும்.

புதிய சட்டதிட்டப்படி, "ஹிந்து" என்ற பதத்திற்கு விளக்கமும், அது சம்பந்தப்பட்ட திருமணங்களும் நிலைகுலைக்கக்கூடியனவாயும் அபாயகரமானவையாயும் இருக்கின்றன. இதனின்று "ஜாதி சங்கரம்" என்ற அருவருக்கத் தக்க விளைவுக்கு வழி ஏற்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஜாதிக் குழப்பமானது, மதத்திற்கு புராதன பழக்க வழக்கங்களும் குடும்ப சம்பிரதாயங்களுமே அடிப் படையாயும் அஸ்திவாரமாயும் விளங்கிவந்துள்ள ஓர் நாட்டிலே, ஆத்மீய சமுதாய அபிவிருத்திக்குச் சாவுமணியாக ரூபப்படுத்தும். பண்டைக் காலத்துச் சட்ட நிபுணர் **மனு** என்பவர், "அபாயமும் அழிவும் ஏற்படுமென்ற அச்சமில்லாத நெறியை, தன் முன்னோர்கள் அனுஷ்டித்துவந்த நெறியை ஒருவன் கைப்பற்றிக்கொள்ள வேண்டும். குலதர்மங்களும் ஜாதிதர்மங்களும் தொடர்ந்து அனுஷ்டிக்கப்படவேண்டியதன் அவசியத்தை ஸ்மிருதிகள் வலியுறுத்துகின்றன. இவற்றை

அசட்டை செய்வதால், குடும்பங்கள் சாஸ்வதமான நரகத்திற்கும் நாசத்திற்கும் இழுத்துச் செல்லப் படும்'' என்று திருவாய் மலர்ந்துள்ளார்.

''ஜாதி சங்கரம் குடும்பங்களையும், குடும்ப நாசகர்களையும் நரகத்திற்கு இட்டுச்செல்லும். குடும்ப சம்பிரதாயங்களை விட்டுத் தொலைத்தவர் கள் என்றைக்குமே முடிவற்ற நரகத்தில் வீழ்ந்து துன்பமுறுவார்கள்'' என்று ஹிந்துக்களின் அதிபவித்திரமான கீதா சாஸ்திரம் முழங்குகின்றது.

4-ம் பாகம் 1-ம் அத்தியாயம் 3-ம் பிரிவு பார்க்கவும். முதல் மனைவி மலடியாயிருந்த போதிலும் அவள் உயிரோடிருக்கிறபோது ஒருவன் இரண்டாந்தர மனைவியை விவாகஞ் செய்து கொள்ளக்கூடாதென்று தடையுத்தரவு போடு கிறது. இத்தகைய விவாகம் குற்றமே அல்ல. சில சந்தர்ப்பங்களில் இத்தகைய விவாகம் செய்யலாமென ஹிந்துச் சட்டம் ஊக்குகின்றது. புத்திரன் இல்லாத பெற்றோர்க்குக் கதிமோக்ஷம் கிடையாதென்பது சாஸ்திரயுக்தமானது. புத் என்ற நரகத்தினின்று பெற்றோர்களைக் காப்பாற்றுகிறவனுக்குப் புத்திரன் என்று பெயர்.

புத்திரன் என்ற பதத்திற்குப் பொருளே இது. இவற்றையெல்லாம் கவனித்தால், ஒருவன் புத்திர சந்தான அபிவிருத்திக்காக மீண்டும் திருமணம் புரிந்துகொள்ளத் தூண்டப்படுகிறான் எனத் தெரிகிறது. இரண்டாந்தாரத்துப் புத்திரன் சாஸ்திரப்படி, மாற்றாந்தாய்க்கு ஆத்மீய நலங்களை அளிக்கவல்லவனெனக் கூறப்படுகிறான். இரண்டாந் தாரத்திற்குச் சிபார்சு செய்யும் முதல்தாரத்தை ரத்து செய்துவிட்டு மறுமணம் புரிவது அருவருக்கத் தக்க அறியாமை என்று சட்டப்பிரிவு பொருள்

கூறுகிறது. இத்தகைய திருமணத்தைச் சட்டம் அங்கீகரியாமலிருப்பதோடன்றி, இந்து சமுதாயத்தையே அழிவுக்கு இலக்காக்கும் வருந்தத்தக்க இந்த விஷயத்தை ஓர் குற்றமாகவும் கருதுகிறது.

இந்து தர்மசாஸ்திரம் ஏற்கனவே அங்கீகரித்துள்ள பகுதிகளுடன், தற்போதுள்ள சட்டமானது வாரிசு உரிமைக் கோட்பாடுகளின் பிரகாரம் புதிய பல வாரிசுகளையும் புகுத்துகின்றது. ஹிந்து கலாசாரப்படி, இறந்தவர்களுக்கும் அவர்களுடைய முன்னோர்களுக்கும் ஆன்மீய நலன்களை அளிக்கும் திறமை படைத்தவனாக ஓர் வாரிசு இருத்தல் வேண்டும் என்பதாகும். புதுச்சட்டம் பொருளாதாரப்படி சரியானதல்ல. சமுதாய ரீதியாகத் தீங்குவாய்ந்தது. உடனிகழ்ச்சியாக உரிமை கொள்ளும் வாரிசுகளுள் மனஸ்தாபங்கள் ஏற்படும். ஹிந்துக்களின் சொத்துக்கள் பல துண்டுகளாகப் பிரிவினை அடைந்துபோகும். இது ஏக குடும்பத்திற்குப் பயங்கரமான அதிர்ச்சியாயிருக்கிறது. சமுதாயத்தின் பொருளாதார நிலைமையே வேரறுத்து வீழ்த்துகிறது. சமுதாயத்திற்கே பெருங் கேட்டினை விளைவிக்கிறது. பெண்களுக்கு அளிக்கப்படும் இந்த வாரிசு ஆதரவு அவர்களுக்குத் தடையாயிருக்கும். அவர்களுடைய சமுதாய, ஒழுக்க ரீதியான ஆத்மீய முன்னேற்றத்திற்கு இது பிரதிகூலம் செய்யும். பண நிர்வாகச் சுயேச்சையும், சமூகச் சுதந்திரமும் பெண்மணிகளுக்கு எக்காலத்திலும் வழங்கக்கூடாதென்று கண்டிப்பாகச் சாஸ்திரங்கள் கர்ஜிக்கின்றன. இவற்றினால் காலக்கிரமத்தில் ஒழுக்கக் கேட்டிற்கும் சமூக அபகீர்த்திக்கும் அவர்கள் இலக்காக நேரிடும். ''பிதா ரக்ஷதி கௌமாரே, பர்த்தா ரக்ஷதி யௌவனே, புத்ரோ ரக்ஷதி வர்த்தகி நாஸ்கரி ஸ்வதந்தரிய மர்ஹதி'' என்று ஒரு ஸ்லோகம்

முழங்குகிறது. ஓர் பெண்ணை விவாகத்திற்குமுன் தகப்பனார் ரக்ஷித்து வருகிறார்—யௌவன காலத்தில் அவள் தன் கணவனின் ஆதீனத்தில் இருந்து வருகிறாள்—வயோதிக காலத்தில் அவளுடைய புத்திரனின் பாதுகாவலில் இருந்துவருகிறாள்—என்பது அச்சுலோகத்தின் கருத்து.

ஓர் ஸ்திரீ சமயத்தை நிலைநிறுத்துவதற்கும், தேசீய வன்மைக்கும் சுபிட்சத்துக்கும் உறுதுணையாய், அடிப்படையாய், முதுகெலும்பாய் இருந்து வருகிறாள். வீட்டுக்கு அவள் இராணியாய் இலங்குகிறாள்—உபசாரம் பண்ணுகிற தேவதூதனாக விளங்குகிறாள். சமுதாயக் கட்டுக்கோப்பு எத்தகையதாயிருந்தாலும் அதற்கு மூலாதாரத் தொடக்கத்திற்கு வீடு ஓர் அம்சம். இப்பேர்ப்பட்ட வீட்டிலே உற்சாகமூட்டி உயிர்ப்பிக்கும் சக்தியாயும் அதிஷ்டான தேவதையாயும் அவள் விளங்குகிறாள். ஓர் தேசத்திற்குச் சிசுபோஷணசாலையாக ஓர் குடும்பம் பணியாற்றுகிறது. எதிர்காலத்தில் குழந்தைகளை நல்ல குழந்தைகளாகப் பயிற்றுவிக்கிற கழகமாகவும், இனிய ஸ்தாபனமாகவும் ஓர் குடும்பம் காட்சியளிக்கிறது. பெண்மையானது தாய்மையின் விசேஷத்தால் ஒரு குடும்பத்தைச் சோபிக்கச் செய்கிறது. தெய்வீகத் தாய்க்குப் பிரதிநிதியென்று குடும்பப் பெண் கருதப்படுகிறாள். குடும்பத்தில் அத்தகைய ஸ்தானத்தை வகிக்கவும் செய்கிறாள். மற்ற தெய்வ வழிபாட்டைக் காட்டிலும் தாய் வழிபாட்டையும் மரியாதையுமே ஹிந்துக்களாகிய நாம் முதன்மையாக ஏற்றுக் கொள்கிறோம். 'ந காயத்ரே பரோ மந்த்ரோ ந மாது பரதைவதம்'' ஹிந்துக்களாகிய நமக்குள் ஓர் பெண்மணியின் ஸ்தானம் இத்தகையதாகும். எதிர்காலத்துக் குடிமக்கள் தூய்மையாயும், கலப்பற்றும் மலினப்படாமலும் இருத்தல்

வேண்டும். அத்தகைய குடிமைக்கு மூல ஊற்ருக வும், ஆதாரமாகவும் ஓர் பெண்மணி விளங்குகிருள். ஆணுக்கு அவள் சரிசமநிலை வகிப்பவள் அல்ல. ஆனுல் அவள் அர்த்தாங்கி—ஆடவனில் ஓர் பாகமாய் இருக்கிருள். அவளுக்குச் சுதந்தரம் வழங்குதலானது அவளுடைய அந்தஸ்தினின்று ஏற்படும் வீழ்ச்சிக்கும் மஹத்தான சீரழிவுக்கும் காரணமாகும். ஆண்மகனுக்குரிய குணங்களுடன் ஆடவனைப்போன்று நடந்துகொள்ளும் ஓர் ஸ்திரீ எங்கு இருக்கிருளோ, அந்தவீடு சுடுகாடேயன்றி வேறல்ல. சொத்தும் பணமும் அவள் ஆதீனத்தி லிருந்தால், அவை அவளுடைய ஸாந்தியைக் குலைக்கச் செய்வதன்றி, பொது ஸ்தாபனத்திற்கு இழுத்துச்சென்று அநியாயக்கார, சுயநல விஷமி களின் கொடுமைக்கு இலக்காக்கிவிடும். பெண்மைக்கு முக்கியத்துவம் கற்பு. அவளுக்கு அது அணிகலனுகவும் அவளுடைய குணத்திற்கும் பண்பாட்டிற்கும் சிறந்த பாதுகாப்பாகவும் உள்ளது. இக்கற்பை அழிக்கக்கூடிய ஆபத்துக்கு உட்படுகிருள். வெகுவிரைவில் அவள் சுதந்தரம் பெற்றுவிடுகிருள். இச்சுதந்தரம் பலவித கஷ்டங் களையும் சீர்கேடுகளையும் உண்டாக்குகிறது. சீர்திருத்தச் சட்டங்கள் அவர்களுடைய க்ஷேமத்திற்கும் சந்தோஷத்திற்கும் எவ்வித உறுதிப் பாடும் செய்யவில்லை. ஸாஸ்திரங்கள் புகட்டுகிற கோட்பாடுகள் அழிந்து நாசமடையும்.

பிரஸ்தாபிக்கப்பட்ட சட்டம் நன்மைக்கு வெகுதூரத்தில் உள்ளது. உண்மையில் அது ஹிந்துக்களின் நலத்திற்கு அபாயம் விளைவிக்கக் கூடியதாயுள்ளது. ஞானம் படைத்த மஹான்கள் தீர்க்காலோசனை செய்து நிர்ணயித்த சமுதாயக் கட்டுக்கோப்பு பல நூற்ருண்டுகளாக நன்கு இயங்கி வருகிறது. இச்சட்டம் இக்கட்டுக்கோப்பை

மாற்றியமைப்பதாயிருக்கிறது. இத்தகைய விஷயங்களில் செயலாற்றத்தக்க அதிகாரம் வாய்ந்தவர்கள் கண்ணியம் படைத்த சமூகத் தலைவர்களாவார்கள். மேனாட்டுக் கொள்கைகளிலும் கருத்துக்களிலும் ஊறியுள்ள பட்டதாரிகள் இவ்விஷயங்களில் தலையிடத் தகுதிவாய்ந்தவர்கள் அல்ல.

ஹிந்து சமுதாயத்தில் ஆன்மீய உணர்வும், சுயமரியாதையும் வாய்ந்த ஒவ்வொரு அங்கத்தினரும், பிரேரேபிக்கப்பட்டுள்ள இச்சீர்திருத்தங்களை ஒரே குரலுடன் எதிர்த்து வீழ்த்துவதற்குக் கடமைப் பட்டிருக்கிறார்கள். பெரும்பான்மையோர் ஈடுபடல் வேண்டும். எங்கள் புராதன நாகரிகத்தையொட்டி நன்கு வேரூன்றிப் பரந்து அங்கீகரிக்கப்பட்டுள்ள சட்டங்களை மிதித்துச் சீர்குலைக்கும் பயங்கரமான இப்புதிய சட்டத்தைக் கண்டனம்பண்ணி எதிர்க்குமாறு நான் எனது தேசத்திலுள்ள ஒவ்வொருவரிடமும் இதய பூர்வமாய் முறையிடுகிறேன்.

தொன்றுதொட்டு வழங்கிவரும் மத சம்பந்தமான சம்பிரதாயத்தையொட்டிய விஷயங்களில் பொறுப்பற்ற முறையில் தலையிடுதலைத் தடுக்க வேண்டும். இத்தகைய சட்ட நிர்மாணத்தை அறுதியான ஐக்கிய உறுதிப்பாட்டுடன் எதிர்ப்பதற்கு எல்லாவித வழிவகைகளையும் கையாளாமல் இருந்துவிடலாகாது. அழிவுக்கேதுவான இச்சீர்திருத்தங்களை நீக்கித் தொலைக்குமாறு உடனடியாக அதிகாரிகளை வற்புறுத்தும் முயற்சியில் எந்த ஒரு ஹிந்துவும் சளைக்கலாகாது.

### 3. புருஷர்களின் கடமை:

குடும்பப் பெண்களுக்கு அனுசரணையாகப் புருஷர்கள் செய்யவேண்டிய கடமைகளைப்பற்றி

எதுவுமே எழுதாவிட்டால், இப்புத்தகம் அரை குறையாயிருக்கும். குடும்பஸ்தர்கள் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய நியமங்களைப்பற்றி சாஸ்திரங்களில் எவ்வளவோ கூறப்பட்டிருக்கின்றன. இருந்தாலும், தற்கால மனிதன் உலகாயத வியவகாரங்களில் பெரிதும் ஈடுபட்டவனாய், தர்ம சாஸ்திர ரீதியாயுள்ள அபாரமான பல நியமங்களை வாசித்துத் தெரிந்துகொண்டு, தன் குடும்ப வாழ்க்கை நடாத்தும் கோட்பாடுகளை நிர்ணயிப்பதற்கு நேரமே கிடைக்காமல் விழிக்கிறான்.

மக்களுடைய குணாதிசயங்களையும் தகுதிகளையும் அனுசரித்து இறைவன் தானே ஜாதி முறையை ஸ்தாபித்தார். ஸ்ரீமத் பகவத்கீதை முழங்குவது போன்று, நன்கு நிர்மாணிக்கப்பட்ட சமுதாயத் திட்டத்தை நிலைநாட்டி, அதனைச் சரிசமமாய் வளர்ச்சியடையச் செய்வதற்குப் புராதன ஸ்தாபனமாகிய ஜாதிப் பாகுபாடும், நான்கு வர்ணாஸ்ரம வாழ்க்கையும் சிறந்த முறையில் இயக்கப்படவேண்டும். நான்கு ஆஸ்ரமிகளும் தத்தம் கடமைகளை ஒழுங்காகப் புரிந்துவந்தால், மக்கள் சமுதாயம் சுபிட்சமான நிலையில் இருந்துவரும். இன்றேல் அங்கு சச்சரவும், குழப்பமும், சண்டையும் கிளம்பும்.

வாழ்க்கையின் முதலாவது ஆஸ்ரமம்தான் பூணூல்தரிக்கும் சடங்கு தொட்டு பிரஹ்மச்சரியம் என்பது. மாணவன் தன் காலத்தின் பெரும் பகுதியை குருவுக்குச் சேவை புரிவதிலும், சாஸ்திரப் பயிற்சியிலும் ஈடுபடுத்துபவனாய், பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொண்டு நிரம்பவும் எளிய வாழ்க்கையை நடாத்துதல் வேண்டும். உண்மையான பிரஹ்மச்சரியத்தைக் கையாளுவதற்கு, மாணவன் குடும்பத்திலுள்ள பெண்டிர்ப் பகுதியினின்று தனிப்படுத்தப்படவேண்டும். இது இயலா

விட்டால் ஸ்திரீகள் எல்லாரிடத்தும் மாதாபிமான மரியாதை செலுத்தும் கோட்பாட்டை மாணவன் மனதில் ஆழ்ந்து தீர்க்கமாகப் பதியும்படி செய்தல் வேண்டும். ஸ்திரீகளைத் தாய்போலப் பாவித்து அவர்களுடன் மரியாதையாக ஒழுகவேண்டும். மாணவனுடைய வாழ்க்கையிலே ஆத்மீகம், லௌகீகம் ஆகிய இரண்டு துறைகளிலும் தக்க கல்வியறிவைச் சம்பாதித்துக் கொள்வதே அவனுடைய பிரதான குறிக்கோளாக இருத்தல் வேண்டும். சரீர, மானசீக சுகாதாரத்தின் அவசியத்தைப்பற்றி அவனுக்கு விளக்கவேண்டும். ஓர் குடும்பத்தை நிர்வகிப்பதற்குப் போதுமான வருவாயைச் சம்பாதிக்கத் திறமை பெற்ருலன்றி, விவாகமும் குடும்பத்தளைகளும் அவனைக் கீழே விழுத்தாட்டலாகாது.

பிரஹ்மச்சாரி ஒருவன் சந்தியாவந்தனத்தையும் காயத்திரி ஜபத்தையும் ஒருநாள்கூட புறக்கணிக்கலாகாது. இரு பிறப்பாளஞன பிரஹ்மசாரி சந்தியாவந்தனம் புரிந்து தினந்தோறும் குறைந்த பக்ஷம் 108 காயத்திரி மந்திரம் ஜபிக்கவேண்டுமென்பதை இன்றியமையாததோர் கடமையென சாஸ்திரங்கள் கட்டளையிடுகின்றன. இகத்திலும் பரத்திலும் காயத்திரி மந்திரத்தைக் காட்டிலும் அதிக புனிதமான மந்திரம் வேறெதுவுமில்லை. நான்கு வேதங்களையும் வேதாங்கங்களுடன் பாராயணம் பண்ணிஞல் எவ்வளவு பலப்ராப்தியோ அவ்வளவு பலப்ராப்தியையும் காயத்ரி மந்திரம் வழங்குகிறது. இந்த ஒரே மந்திரம், நாள்தோறும் மும்முறை உச்சரிக்கப்பட்டால் நன்மையை அளிக்கிறது. இது மேலான ஆரோக்கியத்தையும், அழகையும் வலிமையையும், ஊக்கத்தையும், புஷ்டியையும், முகத்தில் பிரஹ்ம தேஜஸையும் அளிக்கின்றது. பரமஹம்ச சந்நியாசி ஒருவஞல்

எய்தப்பெறும் அதே குறிக்கோளை காயத்திரி மந்திரத்யானத்திஞல் பிரஹ்மச்சாரியாலோ, குடும்பஸ்தஞலோ அடையமுடியும்.

பெண்மணிகள் வேதங்களைக்கற்று காயத்ரி ஜபிப்பதை சாஸ்திரங்கள் அனுமதிக்கின்றனவா என்பது சந்தேகமாயுள்ளது. பண்டைக்காலத்து ஹிந்துப் பெண்கள் சமுதாயத்தில் ஓர் அத்தாட்சி காணலாம். கற்பு வழுவாமல் மகரிஷிகளுக்குத் தொண்டு புரிவதும், ஆத்மாவைப்பற்றித் தியானஞ் செய்வதுமான வாழ்க்கையை அவர்கள் மேற்கொண்டு பிரஹ்மக்ஞானம் பெற்ருர்கள். பூணூலைத் தரித்துக் கொண்டிருந்தார்கள். பிரஹ்ம விசாரணையிலும், நிதித்தியாசனத்திலும் அவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. வேத காலத்திற்குப் பிற்பட்ட ஹிந்து கலாசாரத்தில், வேதமோதுதல் புனித மந்திர உச்சாடனம் ஆகியவற்றில் பெண்களுக்குள்ள உரிமை நிராகரிக்கப்பட்டது; அதே சட்டம் இன்று அனுஷ்டானத்திலிருந்து வருகிறது.

எல்லா உபதேசங்களின் ஸாரம் அடியிற்கண்ட **தைத்திரேய உபநிஷத்தில்** அடங்கியுள்ளது :—

"வேதங்களைக் கற்றுக் கொடுத்துவிட்டு குரு தனது சிஷ்யனிடம் உபதேசிப்பதாவது : உண்மை பேசு, உன் கடமையைச் செய். வேதம் ஓதுவதினின்று ஒருபோதும் தயங்காதே. சத்தியத்தினின்று ஒருபோதும் பின்வாங்காதே. கடமையினின்று ஒருபோதும் பின்வாங்காதே. உன் க்ஷேமத்தைப் புறக்கணிக்காதே. உன் நலத்தை அசட்டை பண்ணுதே. வேதங்களைக் கற்பதையும் அவற்றின் உபதேசங்களையும் புறக்கணிக்காதே. கடவுள்களிடத்தும் பிதுருக்களிடத்தும் உனக்குள்ள கடமைகளைப் புறக்கணிக்காதே. தாய் உன் கடவுளாகட்டும். தந்தை உன் கடவுளாகட்டும்.

குரு உன் கடவுளாகுக. விருந்தாளி உன் கடவுளாகுக. குற்றங்கள் அற்ற காரியங்களையே செய்—இதரவற்றை அல்ல. நமக்கு நல்லவையாக உள்ள காரியங்களையே நீ செய்யவேண்டும். உங்களைக்காட்டிலும் மூத்தோர்—பிராஹ்மணர்களின் களைப்பை நீ போக்கவேண்டும்—அவர்களுக்கு ஆசனம் முதலியவற்றைக் கொடுத்து உபசரித்து, நன்கொடைகள் நம்பிக்கையோடு கொடுக்கப்படவேண்டும். நம்பிக்கையின்றி நன்கொடை கொடுக்கப்படலாகாது. நன்கொடைகள் ஏராளமாகவும், அடக்கத்துடனும், இரக்கத்துடனும் கொடுக்கப்படவேண்டும்.''

''ஏதாவது ஒரு செய்கை அல்லது ஒழுக்கம் பற்றி ஏதாவது சந்தேகம் கிளம்பினுல், தீர்க்கமாய்ச் சிந்தனைபுரிகிற சமயாசார, தர்ம சாஸ்திரோக்தமான பிறரால் தூண்டப்படாத, கொடூரமற்ற பிராஹ்மணர்கள் நடந்து கொள்வதுபோல நீ நடந்து கொள்ளவேண்டும்.''

''பாவஞ்செய்தவர்களோடு எப்படிப் பழகவேண்டும்? தெய்வ சிந்தனை செய்கிற, சமயாசார, தர்ம சாஸ்திரோக்தமான, பிறரால் தூண்டப்படாத, கொடூரமற்ற பிராஹ்மணர்கள் நடந்து கொள்வது போல, நீ பாபஞ்செய்தவர்களோடு பழக வேண்டும்.''

''இதுதான் ஆணை. இதுதான் உபதேசம். வேதங்களின் இரகசியம் இதுவே. கடவுள் கட்டளை இதுவே. இது அனுஷ்டிக்கப்படவேண்டியது. இதுபற்றித் தியானிக்கப்படவேண்டும்.''

## 4. கிரஹஸ்தாஸ்ரமம்

மாணவன் தன் படிப்பை முடித்துக்கொண்டு, குடும்ப வாழ்க்கையின் கடமைகளையும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளத் தயாராகும்போது, கிரஹஸ்

தாஸ்ரமத்தில் புகுகின்றான். எல்லா ஆஸ்ரமங்களிலும் குடும்பஸ்தன் மிக்க உயர்நிலை எய்தியவன்—ஏனெனில் அவன் இதர மூன்று ஆசிரமவாசிகளை இரக்ஷிக்கிறான். நதிகள் ஓடி கடலில் சங்கமமாகி இளைப்பாறுவனபோல, எல்லா ஆசிரமங்களும் குடும்பஸ்தனிடம் புகலிடமாய்ப் புகுகின்றன. தயாளம், அன்பு, கருணை, பொறுமை, சகிப்புத் தன்மை, தூய்மை, விவேகம், நல்ல நீதி முதலிய பண்பாடுகளை வளர்ப்பதற்கு ஏற்ற துறை இதுவே ஆகும். யௌவனக் கணவன் வாழ்க்கைத் துணைவியான தனது மனைவியினிடத்தில் நற்குண நல்லொழுக்கத்தை உருவாக்க வேண்டிய பொறுப்புள்ளவனாகிறான். குடும்பத்தின் வருங்கால சுபிட்சம் அவளது நடத்தையைப் பொறுத்துள்ளது. தொடக்க நிலையிலேயே இளம் மனைவியை நன்னெறியில் செலுத்திவிட்டால் வீட்டில் அமைதியும் செழுமையும் நிலவும்.

மூத்தோர்களிடத்தில் தக்க மரியாதை, குழந்தைகளை அன்பு பாராட்டி வளர்த்தல், தனது கடமைகளைச் சளைக்காமல் நிறைவேற்றல், இனிய சொல், அடக்கம், நாணம் முதலிய உயரிய பண்பாடுகள் வெற்றிகரமான இல்வாழ்க்கைத் துணைவியின் இன்றியமையாத இலக்ஷணங்கள். திருவிழா மற்றும் விசேஷ காலங்களில் சுபிட்சகரமான வாழ்வை விரும்பும் கணவன் குடும்பப் பெண்மணிகளுக்குப் பக்ஷணங்கள், ஆடை, உடை, ஆபரணம் முதலியவற்றால் திருப்திப்படுத்தல் வேண்டும்.

குடும்பச் செலவுகளைக் கண்காணித்தல், உடல் தூய்மை, படுக்கை, ஆடை உடை தட்டுமுட்டுச் சாமான்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ளல் ஆகியவற்றில் கணவன் விசேஷ கவனம் செலுத்தி,

வீட்டுப் பெண்மணிகளை பணத்தைப் பதுக்க விடாமலும், அதிகம் செலவிடாமலும், பார்த்துக் கொள்ளவேண்டும். தீய சக்திகள் சற்றேனுங்கூட பாதிக்காதவண்ணம் அவர்கள் பெண்மணிகளைப் பாதுகாக்க வேண்டும்.

தன் இருதயம் தூய்மை பெறுதற்பொருட்டு ஒரு குடும்பஸ்தன் தினசரி **பஞ்சமகா யக்ஞங்கள்** நடத்துவது தலையாய கடமை ஆகும். பஞ்சமகா யக்ஞங்கள் :—

(1) **தேவயக்ஞம் :—** வேத மந்திரங்களை ஜெபித்துக்கொண்டு தேவர்களுக்கு அர்க்கியம் அளித்தல்.

(2) **ரிஷியக்ஞம் :—** வேத பாராயணஞ் செய்தல், மாணவர்களுக்கு வேதங்களைக் கற்றுக் கொடுத்தல், ரிஷிகளுக்கு அர்க்கியம் அளித்தல்.

(3) **பித்ருயக்ஞம் :—** தர்ப்பணம் அல்லது அர்க்கியம் பித்ருக்களுக்கு அளித்தல், அவர்களுக்கு வருடாந்திர சிரார்த்தம் செய்தல்.

(4) **பூதயக்ஞம் :—** பசுக்களுக்கும், காகங்களுக்கும், இதர பிராணிகளுக்கும் உணவு பகிர்ந்தளித்தல், இது சர்வ வியாபகமான அன்பையும் அத்வைத உணர்ச்சியையும் வளர்க்கிறது.

(5) **அதிதியக்ஞம் :—** அதிதிகளுக்கு உணவளித்து மரியாதை செய்தல்.

ஒவ்வொரு குடும்பஸ்தனும் இந்த ஐந்து யக்ஞங்களைச் செய்தாக வேண்டும். செய்யத் தவறினால் தோஷம் ஆகும். அடுப்பங்கரை,

தண்ணீர்க் குடம், காய்கறி அரிதல், மாவரைத்தல், வீட்டைக் கூட்டிச் சுத்தம் செய்தல் ஆகிய ஐந்து இடங்களில் பாவம் செய்கிறோம். இப்பாவங்கள் யாவும் மஹாயக்ஞங்கள் செய்வதால் கழுவப்படும். ஒவ்வொரு துவிஜனும் இந்த யக்ஞங்களைச் செய்யவேண்டும்.

பித்ருக்கள் பித்ருலோகத்தில் வசிக்கிற நம் முன்னோர்கள். அவர்கள் திவ்விய திருஷ்டியும் தூரத்திலுள்ள சப்தத்தைக் கேட்கும் சக்தியும் பெற்றிருக்கிறார்கள். மந்திரங்கள் உச்சரிக்கப்பட்டால், அவர்கள் பலமான சக்தியை அதிர்வு அலைகளின் மூலம் செலுத்துகிறார்கள். பித்ருக்கள் தூரத்தில் எழுகிற சப்தங்களைக் கேட்கிறார்கள். அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். அர்க்கியம் அளித்தவர்களை அவர்கள் ஆசீர்வதிப்பார்கள். சிரார்த்தத்தில் உணவுச்சத்து சூரிய கிரணங்களினால் சூரியலோகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு, அதனால் பித்ருக்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். ஜெர்மனி தேசத்தில்கூட அநேகர் சிரார்த்தமும் தர்ப்பணமும் செய்கிறார்கள். அவர்கள் விஞ்ஞான பூர்வமாக ஆராய்ச்சி பண்ணி அத்தகைய அர்க்கியங்களின் பலன்களைப் பற்றித் தெரிந்துள்ளார்கள். ரிஷிகளையும், பித்ருக்களையும் திருப்திப்படுத்துவதற்கு எல்லா குடும்ப மனிதர்களும் சிரார்த்தமும் தர்ப்பணமும் செய்வதை பிரதானமான கடமையாகக் கொள்ளவேண்டும். விஷயம் தெரியாதவர்கள் இவற்றைச் செய்யப் புறக்கணித்து முடிவில் துன்புறுவார்கள்.

குடும்பத்தில், பேதங்கள், அபிப்ராயபேதங்கள் சச்சரவுகள், பரஸ்பர ஒத்துழைப்பும் உதவியும் இல்லாமை, தற்காலத்தில் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. இதன் பயனாக, நாளுக்கு நாள்

பரஸ்பர அவநம்பிக்கையும் சகியாத்தன்மையும் வளரத் தொடங்குகின்றன.

கணவன் மனைவிகளுக்கிடையில் தோன்றுகிற சச்சரவுகள் அதிகரித்து விவாஹரத்து செய்து கொள்ளும் அளவுக்கு வலுத்து வருகின்றன. இது வருந்தத்தக்கதோர் சமூகப் பிரச்சினையாகிவிட்டது. தம்பதிகளின் மனத்தில் சூழ்நிலைக்கு உகந்ததாக நடந்துகொள்ளும் இயல்பும் புத்திகூர்மையான உள்ளாராய்வும் இல்லாமையே இதற்கு மூல காரணமாகும். ஒவ்வொருவரும் மிகுந்த சிரத்தையோடு தத்தம் உரிமைகளை வற்புறுத்துகிறார்களே யன்றி கடமைகளை நிறைவேற்றுகிறார்களில்லை. வாலிபர்கள் மிக்க சுயநலப்பற்றைக் கொண்டவர்களாகி, மனைவியின் நலத்தையும் கவனியாதவர்களாகி விடுகிறார்கள். வேகமாக ஓடி விதவிதமான மாறுதல்களைப் புகுத்துகின்ற காலநிலைக்குத் தக்கவாறு தங்களைத் திருத்தியமைத்துக்கொள்ள இயலாதவர்களாகப் பெரியோர்கள் காணப் படுகிறார்கள். இருபது வருடங்களுக்கு முன் இருந்ததைப்போல இப்போது இல்லை. ஒருவர் தமது கோட்பாடுகளையும் விபரீத மனோபாவங்களையும் வற்புறுத்தி அறிவீனமாகச் சச்சரவு செய்வது நல்ல வழி அல்ல. பெரியவர்கள் இளைஞர்களின் மன நிலையை நன்கு புரிந்துகொண்டு அதற்கேற்பத் தங்களை மாற்றியமைத்துக்கொள்வதில்தான் நல்ல உபாயம் உள்ளது. எல்லாவற்றிற்கும் முக்கியமானது ஒன்று உண்டு. அதாவது, தம்பதிகள் ஒருவரையொருவர் நுட்பமாக புரிந்துகொண்டு அன்னியோன்யமாக ஒழுகி வந்தால், குடும்ப வாழ்க்கையில் ஒற்றுமையும் நேர்மையும் குலாவும் என்பதேயாம். தினசரி வாழ்க்கையில் மற்றவரின் எண்ணங்கள் பூர்த்திபெறும் பொருட்டு ஒருவர் தமது உரிமைகளைத் தியாகஞ் செய்யும் மனப்

பான்மையை வளர்க்கவேண்டும். லௌகாயத அல்லது ஆத்மீயத் துறைகளில் எழுகின்ற விஷயங்களில், குடும்ப அங்கத்தினர்களிடையில் பரஸ்பர ஒத்துழைப்பு இருந்தால், இதுவே குடும்பத்திற்கு நீடித்த சுபிட்சமும் சாந்தியும் அளிப்பதற்குச் சாதனமாகும். உலகில் கண்ணுக்குப் புலப்படுகிற பொருள்களுக்கும், புலப்படாத பொருள்களுக்கும் ஆதாரமாயிருப்பவர் பிரஹ்மன். அதுபோல, உலகாயத வாழ்க்கைக்கு அடிப்படையாக ஆத்மீய நெறி அமையும். பலமான அஸ்திவாரம் இல்லாமற் போனால் கட்டடம் விரைவில் விழுந்து அழியும். அதுபோல, ஆத்மீய அஸ்திவாரம் இல்லாமல் உலகாயாத வாழ்வு வெற்றி பெற்று விளங்க மாட்டாது என்று அறிக.

ஓர் குடும்பஸ்தன் தினந்தோறும் வேதங்களைக் கற்றுப் புனிதமான அன்னதானம் வழங்கவேண்டும். இவைபோன்ற இல்லறங்களை வழுவாமல் செய்து, கடவுள்களையும், பித்ருக்களையும், மஹரிஷிகளையும், மனிதர்களையும், கீழ்த்தர பிராணிகளையும் கடவுளின் சொரூபமாகக்கருதி வழிபடவேண்டும்.

பகவத் கீதை, பாகவதம், இராமாயணம் முதலிய நூல்களை ஊன்றி வாசித்தல், பூஜை அல்லது இறைவனை வழிபடுதல், உண்பதற்கு முன் இறைவனுக்கு நைவேத்யம் அளித்தல், விருந்தாளிகளையும் ஏழைகளையும் உபசரித்து அன்னமிடுதல், மீன், பசுக்கள், நாய்கள், குரங்குகள், பறவைகள் ஆகிய கீழ்த்தர பிராணிகளுக்கெல்லாம் உணவளித்தல்—இச்செயல்கள் பயன்தரத்தக்கவை. இவை இதயத்தூய்மையைத்தரும். ஓர் குடும்பஸ்தன் ஜீவவர்க்கங்களிடத்தில் கருணைபாராட்டித் துன்புறுகிறபோது அவற்றிற்கு உதவி செய்யவேண்டும். அவன் பிராஹ்மணர்களையும் கற்றவர்களையும் சாதுக்களையும் விலங்குகளையும் மரியாதையுடன் வணங்க

வேண்டும். தன் குடும்பத்தின் மீது பற்று வைத்துக் கொள்ளலாகாது. அவன் குடும்பஸ்தனுக இருந்த போதுங்கூட ஆண்டவனை மறக்கக்கூடாது. இவ் உலகத்திலுள்ளவை போலவே, விண்ணுலகம் போன்ற மேலுலக இன்ப நுகர்ச்சிகளை—கண்களால் பார்க்கப்படாத அவற்றை—அழியக்கூடியவையும் தற்காலிகமானவையும் என்று கருதவேண்டும் ஞானம் படைத்தவன்.

பிரயாணத்தின்போது ஒருவன் இதர பிரயாணிகளைச் சந்திப்பதுபோலவே, மனைவி, மக்கள், சுற்றத்தார், நண்பர் ஆகியோரின் உறவையும் பார்விக்க வேண்டும். தூக்கத்தைத் தொடரும் சொப்பனங்கள்போல, சரீரம் விழுந்தவுடன் அவர்கள் மறைகிருர்கள். தூக்கந்தெளிந்து கண் விழித்துக்கொண்டவுடன், தான் கண்ட சொப்பனத்திலுள்ள பொருள்களை அப்பால் உதறுகிருன். அதுபோல, அவன் அவர்களிடமிருந்து எப்போது வேண்டுமாளுலும் தன்னை அகற்றிக்கொள்ளத் தயாராயிருக்கவேண்டும்.

இங்ஙனம் சிந்தனை செய்து சற்றும் அகம் பாவமும் இல்லாமல் வீட்டிலே இருந்துகொண்டு வாழுகின்றவன் குடும்ப பாசத்தால் கட்டுண்டு கலங்கமாட்டான். அவன் முக்தியடைகிருன். பண்டைக்காலத்துப் பெரிய மஹரிஷிகள் விவாகஞ் செய்துகொண்டு கிரகஸ்தர்களாகவே இருந்தார்கள். ஆளுல் அவர்கள் காம வெறியும் மோகமும் கலந்த வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. அவர் களுடைய கிரஹஸ்தாஸ்ரம வாழ்க்கையானது தார்மீக வாழ்க்கையாக மாத்திரமே விளங்கியது. இம் மஹரிஷிகளோடு எழுத்துக்கெழுத்து போட்டியிட உங்களால் இயலவில்லையென்ருல், அவர்களுடைய வாழ்க்கையை ஓர் வரம்பு

அடையாளமாகக்கொண்டு, சத்திய நெறியில் நீங்கள் செல்லவேண்டும். கிரஹஸ்தாஸ்ரமம் என்பது காமமும் விபசாரமும் கொண்ட தீயவாழ்வு அல்ல. அது ஓர் கண்டிப்பான வாழ்க்கையாம்—சுய நலமற்ற சேவையும், எளிய தூய்மையான நடத்தையும், தருமம், நன்மை, அன்பு, சுயஉதவி புண்பாடுகளும் மனித சமுதாயத்துக்கு நலமும் பயனும் அளிக்கவல்லவை எவையோ அவையாவும் சேர்ந்ததோர் கட்டுப்பாடான வாழ்க்கையாம். அப்பேர்ப்பட்ட வாழ்க்கையை நீ நடத்துவாயாகில், சந்நியாசி ஒருவனுடைய வாழ்க்கையைப்போல் அவ்வளவு நலமுடையதாகவே ஒரு கிரஹஸ்த னுடைய வாழ்க்கை விளங்குவதாகிவிடும்.

சிற்றின்ப போகமானது பிராணனையும், தேஜஸையும், வலிமையையும், ஆண்மையையும் ஞாபகசக்தியையும், செல்வத்தையும், கீர்த்தியை யும், தூய்மையையும் பகவத் பக்தியையும் அழித்து விடுகிறது. உடலினின்று ஜீவசக்தியான வீரியத்தை வெளிப்படுத்துவதால், மரணம் துரிதப்படுத்தப் படுகிறது. வீரியம் பாதுகாக்கப்படுமளவு ஆயுள் விருத்தியாகும். தங்கள் ஜீவசத்தாகிய வீரியத்தைப் பெரிதும் இழந்து நஷ்டமடைந்தவர்கள் சோம்பேறி களாகவும் எளிதில் கோபமூட்டத்தக்கவர்களாகவும் இருக்கிறார்கள். எத்தகைய வியாதிக்கும் இவர்கள் எளிதில் ஆளாகிவிடுவார்கள். இறுதியில் அகால மரணத்துக்கு உள்ளாகிறார்கள்.

பிரஹ்மச்சரியம் இல்லாமல் உங்களால் நல்ல ஆரோக்கியத்தையும் ஆத்மீய வாழ்வையும் அனுப விக்க இயலாது. வாழ்க்கையின் ஒவ்வொரு துறை யிலும் இதுதான் வெற்றிக்குத் திறவு கோல் என்பதைக் கவனிக்கவும். மனம் வாக்கு காயம் ஆகிய திரிகரண சுத்திக்கே பிரஹ்மச்சரியம் என்பது

ஜனனேந்திரியத்தை மட்டும் கட்டுப்படுத்திக் கொள்வதல்ல. ஆனால் இதர எல்லா இந்திரியங்களை யும் அடக்கி கட்டுப்படுத்திக் கொள்வதிலேயே பிரஹ்மச்சரிய தத்துவம் அடங்கியுள்ளது.

தற்காலத்தில், ஆடவரும் பெண்டிரும், பையன் களும் பெண்களும் சிற்றின்ப சுகபோகங்களும் காமாதுர ஆசைகளும், கெட்ட எண்ணங்களும் ஆகிய சமுத்திரத்திலே மூழ்கிக் கிடக்கிறார்கள். ''விந்து விட்டவன் நொந்து கெட்டான்'' என்னும் மூதுரையின்படி, வீணாக ஒருவன் தன் சுக்கிலத்தை விரயம் பண்ணினால் அவன் உடல் பலவீனமடை கிறது. மனோவியாதி பீடிக்கிறது, குணசம்பத்து குறைகிறது. பல்வேறு ஆசாபாசங்களிடையிலும் கலக்கங்களிடையிலும் ஒருவனால் பிரஹ்மச் சரியத்தைப் பயிற்சி செய்வதற்கு முற்றிலும் சாத்தியமாகும். இக்குறிக்கோளை அடைவதற்கு நன்கு கட்டுப்படுத்தப்பட்ட வாழ்க்கை, சாஸ்திரங் களை கற்றல், சத்சங்கம், ஜபம், தியானம், சாத்வீக உணவு, தினசரி சுயச்சோதனை, சதாசார அனுஷ்டானம், மூன்றுவிதமான தவம் ஆகிய இவைபோன்ற இதர ஆத்மீய கட்டுப்பாடுகளை மேற்கொள்ளவேண்டும். தங்கள் சிற்றின்ப போகங் களிலே ஓர் நிதானத்தைக் கையாளுகிறவர்களும், மிருகத்தனமான காம உணர்ச்சியினின்று நீங்கியவர் களும், வம்சாவளியை நிலை நிறுத்தும் பொருட்டு மாத்திரம் சந்தானத்தை விருத்தி செய்ய வேண்டு மென்று விரும்புகிறவர்களும்கூட பிரஹ்மச்சாரிகள் ஆவார்கள்.

பிரஹ்மச்சரியத்தை அனுஷ்டிக்க நீ விரும்பினால், உன்னுடைய மனைவியை உன்னுடைய சகோதரியாகப் பாவித்து வரவும். கணவன் மனைவி என்ற கோட்பாட்டை அழித்துவிட்டுச் சகோதரன் சகோதரி என்ற கோட்பாட்டை வளர்க்கவும்.

உங்களிடையில் பரிசுத்தமான வலிமையுடைய அன்பு விருத்தியாகும். ஏனெனில், காமம் என்கிற களங்கம் களைந்தெறியப்பட்டது. அவளுடன் நீ எப்போதும் ஆத்மீய விஷயங்களைப் பற்றியே பேசு. மகாபாரதம், பாகவதம் முதலியவைகளிலுள்ள கதைகளை எடுத்துச்சொல்லு. விடுமுறை நாட்களிலே அவளுடன் உட்கார்ந்து சமய சம்பந்தமான நூல்களைப் படித்துக்காட்டு. அவளுடைய மனம் படிப்படியாக மாற்றம் அடையும். ஆத்மீயத்தில் அவள் ஆர்வமும் உற்சாகமும் கொள்ளத் தொடங்குவாள். இம்மாதிரியான திருப்பம் உன்னுல் இயலும்.

காமாதுரமான பார்வை, காமாதுரமான நினைவு, சொப்பனஸ்கலிதங்கள் ஆகியவை பிரஹ்மச்சரியத்திற்குத் தடைகள் ஆகும். நல்லெண்ணத்துடன் பார்வையைச் செலுத்து. திருஷ்டி தோஷத்தை விட்டுவிடு.

எல்லாப் பெண்மணிகளிடமும் காளிதேவியைப் பாருங்கள். ஓர் பெண் இன்ப நுகர்ச்சிக்குரிய பொருள் என்ற கருத்தை ஒழித்துவிட்டு, அதற்குப் பதிலாக அவள் வணக்கத்திற்கு உரியவளென்றும், துர்க்காதேவியின் உருவெளித் தோற்றமென்றும் பாவிப்பாயாக. துராசாரப் படங்களை உற்று நோக்காதே. இழிவான வசவுச் சொற்களை உபயோகிக்காதே. இருதயத்தில் அகௌரவமான, விரும்பத்தகாத கொள்கைகளும், மோக வெறியும் ஊட்டக்கூடிய நாவல்களை வாசிக்காதே. தீய நண்பர்களைத் தூரத்தள்ளு. மேனுக்கும் பாணியிலோ, விரும்பத்தகுந்த வகையிலோ பெரும்பாலான சினிமாப் படங்கள் அமையாமையால், அவைகளைப்போய்ப் பார்க்காதே. மாட்சிமைப் பட்ட எண்ணங்களாலே புணர்ச்சிச் சக்தியை

ஆத்மீகச் சக்தியாக மாற்றியமைப்பாயாக. ஜபம், கீர்த்தனம், ஆத்ம விசாரணை, யோகாசனம், பிராணாயாமம் ஆகியவற்றைப் பழகுவாயாக. கீதையையும், உபநிஷதங்களையும் இதர சமய நூல்களையும் ஊன்றிப் படிக்கவும். மகாத்மாக்களோடும், யோகிகளோடும், சாதுக்களோடும் சத் ஸங்கம் வைத்துக்கொள். பிரஹ்மச்சரியத்தில் நீ நிலைத்திருப்பாய். புணர்ச்சிச் சக்தியானது மாட்சிமைப்பட்ட சக்தியாக மாறும்.

ஹிந்துக்கள் பல தாரங்களை மணப்பதை சாஸ்திரங்கள் அனுமதித்தாலும் பிரஹ்மச்சரியத்துவத்தையும் சுபிட்சத்தையும் பெற விரும்புகிற ஒருவன் ஏகதார விவாகத்தையே பொதுவாக ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏகதாரச் சட்டத்தை அனுஷ்டித்தால், ஹிருதயம் வெடித்துவிடும்படியான சண்டைகள் பலவற்றையும் தவிர்க்கமுடியும். அபூர்வமாகச் சில இடங்களில் மனைவி மலடியாகி விட்டால், வம்சவிருத்தியின் பொருட்டு, இரண்டாந்தாரத்தை விவாகஞ் செய்துகொள்வது இன்றியமையாததாகி விடுகிறது. இது ஓர்வித விலக்கேயன்றி சட்டம் அல்ல. திருமணத்தின் கருத்து சற்புத்திரனைப் பெறுதலே ஆகும். அதன் பொருட்டுப் பல தாரங்களுடன் வாழுவது நல்ல கோட்பாடும் அல்ல. மனத்திட்பமும் தேகதிடமும், ஆத்மீயத் திறமையும் விரும்புகிறவர்கள் இக்கோட்பாட்டைக் கைக்கொள்ள மாட்டார்கள். அபரிமிதமான இன்ப நுகர்ச்சியும் அதனால் ஏற்படும் சக்தி விரயமும் எக்காரணங்கொண்டும் நீக்கத் தக்கவை.

நடத்தை நல்லதாய் அமைதல் வேண்டும். நற் காரியங்களுக்குச் **சுகிருதம்** எனவும், தீயவைகட்குத் **துஷ்கிருதம்** எனவும் பெயர் வழங்கப்

படுகின்றன. பரிசுத்தமான காரியங்களைச் செய்கிறவனைப் பற்றிப் பொதுமக்கள், ''அதோ! அச் சிறந்த மனிதர் நன்னடத்தை யுடையவர்'' என்று போற்றிப் புகழுகின்றார்கள். போற்றுதலுக் குரிய காரியங்களில் ஈடுபடுகிறவர்கள் யாவரும் நற்குண சம்பன்னர்களே. எவர்களுடைய செயல் கள் மக்களின் கண்டனத்திற்கு இலக்காகின்றனவோ அவர்கள் யாவரும் தீய நடத்தையுடைய கயவர் களே. நன்னடத்தையை வளர்க்க நீ விரும்பினால், எளிமை, சமயோசிதம் போலத் திருத்தி அமைத்துக் கொள்ளும் திறமை, சகிப்புத்தன்மை, பொறுமை, சத்தியம், அஹிம்சை ஆகிய பல்வேறு பண்பாடு களைப் பயிர் செய்யவும். அகங்காரத்தை நசுக்கித் தள்ளவே வேண்டும்.

நேர்மையுடையவனும், சிடுசிடுப்பையும் சினத்தையும் அடக்கியவனும் தினந்தோறும் மௌனத்தைச் சாதிக்கிறவனும், சாத்வீக உணவை உட்கொள்பவனும், தனது ஜீவ சக்தியை அமித மாக விரயம் பண்ணாதவனும், பேராசைப் படாத வனும் எவனோ அவன் நன்னடத்தையை வளர்க்கச் சக்தி படைத்தவனாகிறான். நன்னடத்தை அற்றவன் நானிலத்தில் நடமாடினும் நாறும் பிணமெனவே நவிலலாம். நன்னடத்தை படைத்தவன் இந்நிலத் தில் இயங்கும் இறைவனே என்று இயம்பலாம். ஆகையால், நன்னடத்தையை விருத்தி செய்து கொண்டு, அமரத்துவமும், நித்தியானந்தமுமான வாழ்க்கையின் குறிக்கோளைப் பெறுவாயாக.

இவ்வாசகங்களைப் படிக்கும் அன்றே ஓர் யோகி யின் தூய வாழ்க்கையை நடத்தத் தொடங்கு வாயாக. மனத்திற்குத் தயை தாக்ஷண்யம் காட்ட லாகாது. தன்னம்பிக்கை முற்றிலும் இன்றியமை யாதது. பிறத்தியாரிடமிருந்து சில விஷயங்களைக்

கேட்டுக்கொள்ளலாம். ஆனால், ஆன்மீய நெறியில் நடமாடவேண்டியவன் நீயே. உனது மனைவியைக் கூட இந்நெறியில் பழக்கவேண்டும். தீவிரமான சாதனையை அவளும் செய்தல்வேண்டும். அவள் தன் கணவனுக்குத் தொண்டுபுரிந்தும் ஒழுங்கான மனோபாவத்துடன் அவர் சரீரத்தைப் பாது காத்தும் வரக் கடமைப்பட்டவள்.

மனைவி தன் கணவனுக்கு நேர்மையான உள்ளப்பண்பாடுடன் தொண்டு புரிந்து வந்தால், சத்தியவானுக்கு வாய்ந்த சாவித்திரியைப் போலவும், அத்திரி மகரிஷிக்கு வாய்ந்த அனுசூயையைப் போலவும், தன் கணவன் வடிவத்திலேயோ, வடிவத்தின் மூலமாகவோ அவளுக்கு ஆத்ம சாக்ஷாத்காரம் சித்திக்கும்.

தன் பக்கத்தில் மனைவி இல்லாமல் கணவன் எந்தவிதமான சமயாசாரக் கிரியையும் புரியத் தகுதி வாய்ந்தவன் அல்ல.

## 5. இலகுவான சாதனை

ஒவ்வொரு முகத்திலும் இறைவனைக் காணுங் கள். பிரிவு மரணம். ஐக்கியமே நித்திய வாழ்வு. மேன்மையும் கீழ்மையும் வெறும் அஞ்ஞானமே. உங்களிடமுள்ளதைப் பிறருக்குப் பகிர்ந்து கொடுங்கள். மக்களுக்கு ஆத்ம பாவத்துடன் சேவைபுரியுங்கள். இளமைப் பருவத்திலேயே ஆத்மீய விதையை நட்டுப் பயிராக்குங்கள். ஒரே சக்தி எல்லாக் கண்களின் மூலமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறது. இந்த எல்லா வாய்களின் மூலமாக ஒரே சக்தி புசித்துக்கொண்டிருக்கிறது. இந்த மர்மத்தைப் புரிந்துகொண்டு எங்கும் ஏகத்துவத்தையே உணருவாயாக. சர்வத்தையும் தழுவுகிற, சர்வத்தையும் தன்னுள் அடக்கிக்

கொண்டுள்ள விஸ்வ பிரேமையை விருத்தி செய்வாயாக. இந்த உலகம் முழுதும் உன்னுடைய சொந்த சரீரமாகவும், சொந்த வீடாகவும் பாவிப்பாயாக. மனிதனுக்கு மனிதனைப் பிரிக்கும் சகலவிதமான தடைகளையும் அழிப்பாயாக. இவ் உலகத்தில் அந்தர்யாமியாக ஆளுபவர் இறைவன். உலகம் முழுவதும் பிருந்தாவனம். இந்த சரீரம் இறைவனுடைய நடமாடுங் கோயிலாகப் பாவிப்பாயாக. ஒவ்வொரு அலுவலும் ஆண்டவனுக்கு அர்ப்பணிக்கின்ற நைவேத்தியமாகும். அலுவலே ஆராதனை. ஆண்டவனின் பிரதிநிதி என்ற கோட்பாட்டை அறவே விட்டொழிப்பாயாக. எவ்விதமான பலன்களையும் எதிர்பார்க்காதே. எல்லா உயிர்களும் ஆண்டவனுடைய பிம்பங்கள் என்று உணருவாய். ஒவ்வொரு அலுவலையும் ஆண்டவனுக்கு அர்ப்பணிப்பதன் வாயிலாக அதை யோகமாக மாற்று. சுயச்சோதனை தினசரியும் தேவை. அப்பால், யோகமாணவன் தன் குறை பாடுகளை அகற்றி ஆத்மீயத்தில் விரைவாக முன்னேற முடியும். இளஞ் செடிகளைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாக்கிறான் தோட்டக்காரன். தினந்தோறும் களைகளைப் பிடுங்குகிறான். சுற்றிலும் நேர்த்தியான வேலியை அமைக்கிறான். தக்க காலங்களில் அவைகளுக்குத் தண்ணீர் பாய்ச்சு கிறான். அப்பால்தான் அவை அழகுறவளர்ந்து விரைவில் பழங்களைத் தரும். இதே மாதிரி, யோக மாணவன் தினசரி சுயச்சோதனையின் மூலமாகவும், சுயப்பாகுபாட்டின் மூலமாகவும் தனது குறைபாடு களைக் கண்டுபிடித்து, பிறகு தகுந்த முறைகளைக் கையாண்டு அவைகளை அகற்ற வேண்டும்.

விடியற்காலை நான்கு மணிக்கு எழுந்திரு. ஜபத்திலும் தியானத்திலும், பொதுப் பிரார்த்தனை யிலும், சங்கீர்த்தனம் முதலியவற்றிலும் சிறிது

நேரத்தைப் பயன்படுத்து. ஸ்ரீமத் பகவத் கீதையி லிருந்து ஒரு சுலோகத்தை வாசித்து அதன் பொருளை விரித்துரைப்பாயாக. தனியாகச் செய்யும் சாதனையைக் காட்டிலும் இத்தகைய கூட்டுச் சாதனை வெகு முக்யத்வம் வாய்ந்தது. இது ஆத்மீய வளர்ச்சியை விரைவில் அளிக்கும். மாலை நேரத்தில் **லிகித ஜப வகுப்பு** (ஜபம் எழுதும் வகுப்பு) ஒன்றை நடத்துவாயாக. கடைசியில், கீதை, உபநிஷதங்களைப்பற்றிய விரிவுரை செய்யவும். அல்லது பக்தி, யோகம், வேதாந்தம் முதலிய வற்றைப்பற்றிய சில புத்தகங்களை மாத்திரம் படிக்கவும். இரவிலே சங்கீர்த்தனம், கூட்டுப் பிரார்த்தனை, கூட்டுத்தியானம் ஆகியவற்றிற்காக அமருங்கள். இது எல்லோருக்கும் ஆத்மீய நலத்தை அளிக்கவல்லது. உலகத்தில் சுறுசுறுப் பான வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்கள் தினசரி குறைந்தபக்ஷம் ஒரு மணி நேரமாவது மௌன விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஞாயிற்றுக் கிழமைகளிலே ஆறு மணி நேரம் மௌனத்தை அனுஷ்டிக்கவும். தவருமல் ஒழுங்காக மௌனத்தை அனுஷ்டிக்கிறீர்கள் என்று தெரிந்துகொண்டவர்கள் உங்களைத் தொந்தரவு பண்ணமாட்டார்கள். உங்களுடைய குடும்பத்தினர்களும் கூட உங்களைத் தொந்தரவுபடுத்த மாட்டார்கள். மௌன நேரத்தை ஜபத்திலும் தியானத்திலும் உபயோகிக்க வும். காலைத் தியான மௌன நேரத்தைத் தவிர, காலையிலும் மாலையிலும் உங்களுக்கு உகந்த எந்த நேரத்திலும் மௌனம் சாதிக்கக்கூடும்.

தர்மம் உங்களைப் பெரிதும் தூய்மைப்படுத்தும் அம்சம். உங்களுடைய வருமானத்தில் பத்தில் ஒரு பங்கு துகையை ஒழுங்காகத் தர்மத்தில் பயன் படுத்துக. மிகவும் உயர்ந்த ரகமான தர்மம் என்னவென்றுல் ஞானத்தைப் பரப்புதலே ஆகும்.

மனித சமுதாயத்திற்குநேரும் அவதிகளுக்கு எல்லாம் மூலகாரணமாகிய அஞ்ஞானத்தைப் போக்குதலே மேற்கண்ட தர்மத்தினுல் விளையும் பயன் ஆகும். சாதுக்களையும், சந்யாசிகளையும், மகாத்மாக்களையும், நற்குண நல்லொழுக்கமுள்ள பிராம்மணர்களையும், தரித்திர நாராயண ஏழைகளையும் உணவளித்து ஆதரவு செய்தல், தேவைப் பட்டவர்களுக்கு ஆடை உடைகளையும் கம்பளிப் போர்வைகளையும் விநியோகித்தல், அநாதை ஆஸ்ரமங்களுக்கும் ஆஸ்பத்திரிக்கும் கல்வி நிலையங்களுக்கும், பரோபகார ஸ்தாபனங்களுக்கும் நிதி வழங்குதல் புத்தகங்களை இலவசமாகக் கொடுத்தும் கல்வி திறமையை அனுசரித்து உபகார நிதி அளித்தும் ஏழை மாணவர்களை ஆதரித்தல், நோயாளிகளுக்கு மருந்து இலவசமாகக் கொடுத்தல் ஆகிய இவை யாவும் தர்மத்தின் பல்வேறு வடிவங்களாம்.

நான் செய்கிறேன் என்ற கர்த்ருத்வ பாவமில்லாமலும் பலன்களை எதிர்பாராமலும் செய்கிற தர்மம் நிஷ்காம்ய பாவத்துடன் செய்யப்படுவது ஆகும். தர்மத்தை ஈசுவரார்ப்பணமாக நிஷ்காம்ய பாவத்துடன் செய்தல் வேண்டும். அப்படிச் செய்தால்தான் விரைவிலே இதயம் தூய்மைப்படும்.

தியானத்தைச் சாதிப்பதற்காக ஏகாந்தத்தை நாட விரும்புகிறீர்களா? தீவிரமான சாதனை புரிவதற்கு ஆத்ம தாகத்தால் தூண்டப்படுகிற ஓர் குடும்பஸ்தரா? உங்களுடைய குடும்பத்தார்களின் தொடர்பை வெடுக்கென வெட்டிக்கொண்டு விலக முடியாது. உலகாயத பந்தங்களையும் உடைமைகளையும் திடீரென்று துண்டிப்பதால், உங்களுக்கு மனோவேதனையும் குடும்பத்தார்களுக்கு அதிர்ச்சியும்

உண்டுபண்ணும். இப்பந்தபாசங்களைப் படிப் படியாக அறுத்தெரியவேண்டும். தொடக்கத்தில் ஒரு வாரமோ, ஒரு மாதமோ தங்கியிருங்கள். பின் சிறுகச்சிறுக காலத்தை நீடிக்கச் செய்யுங்கள். அப்பால் உங்களைப் பிரிந்த குடும்பத்தார்கள் பிரிவின் வேதனையை உணரமாட்டார்கள்.

தங்கள் குமாரர்களை வாழ்க்கையில் நிலை நிறுத்தியவர்களும், உத்தியோகத்தினின்று ஓய்வு பெற்றவர்களும், உலகத்திலே யாதொரு விதமான தொடர்பும் பற்றும் அற்றவர்களும் ஏகாந்தத்திலே நான்கு ஐந்து வருஷங்கள் தீவிரமான தியானமும் தவமும் சாதித்து புனிதத்தன்மை எய்தி ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடையக்கூடும். தவம் முடிந்த பின், ஆத்மஞானம் அடையப்பெற்றதும், ஏகாந்தத்தினின்று வெளிப்பட்டு அவர்கள் தங்களுடைய ஆத்மானந்தத்தையும் ஞான பரிபாகத்தையும் மக்களுடன் பகிர்ந்துகொள்ளல் வேண்டும். ஆத்ம ஞானத்தை உபந்நியாசங்கள் மூலமாக அவர்கள் பரப்புதல் வேண்டும்.

தங்கள் குழந்தைகளைப் பயிற்றுவித்துத் தக்க வாறு பராமரித்தல் பெற்ற தாய்தந்தையர்க்கு ஓர் கடமையாகும். பாலியப் பருவத்தில் தாயின் கண்காணிப்பிலே சிறுவன் வளரவேண்டும். பின், அவனுடைய கல்வியையும், சுகாதாரத்தையும், நடத்தையையும் தகப்பனார் கவனிக்க வேண்டும். பெண்ணைத் தாயாரின் பராமரிப்பில் முற்றிலும் விட்டுவிடவும். தாயார் தன்பெண்ணை நற்குண நன்னடத்தையுடைய ஸ்திரீயாக வளர்க்கவேண்டும். அதற்கேற்றபடி பயிற்சியளிக்கவேண்டும். எக் காலத்திலும் எந்தப்படித்தரத்திலும் பெற்றோர்கள் தத்தம் குழந்தைகளின் குணத்தைப் புறக்கணிக்க லாகாது. வாழ்க்கையில் வெற்றி காண்பதற்கு

குழந்தைகளின் கல்விக்குச்சமய தத்துவ அடிப்படை இருத்தல் வேண்டும். குழந்தைகளுக்கு நன்னடத்தையும் ஆத்மீய நோக்கும் படைத்த சிறந்த கல்வி புகட்டப்படவேண்டும். முதலாவது தலைமுறையில் குழந்தைகளுக்குத்தக்கவாறு பயிற்சி அளிக்கப் பட்டால் குடும்பத்தில் பல தலைமுறைகளுக்கு மகிழ்ச்சியும் ஆனந்தமும் தாண்டவமாடிக் கொண்டே இருக்கும். இளமைப் பருவத்திலே கிரகிக்கப்பட்ட நல்ல ஆத்மீய ஸம்ஸ்காரங்கள் வாழ்க்கை முற்றிலும் நீடித்த ஆரோக்கிய பலனை அளிக்கும். ஆகையால் குடும்பஸ்தர்கள் தங்கள் குழந்தைகளுக்கு அளிக்கும் வியவகார, தார்மீக, ஆத்மீயக் கல்விக்குத் தக்க கவனமும் சிரத்தையும் செலுத்த வேண்டும். இந்த விதத்தில் தேசம் முழுதும் உத்தாரணம் செய்யக்கூடும்.

ஓர் ஸ்திரீ முமுக்ஷுவுக்கு சுவாமி சிவானந்தர் அவர்கள் எழுதியுள்ள லிகிதம்:— மரியாதைக்குரிய அழிவற்ற ஆத்மாவை உடைய முமுக்ஷுவே! கற்புள்ளவளாயிரு. பெண் இனத்திற்கு கற்பு ஓர் முக்கியமான குணம். பெண்மையின் பெருமையைக் காப்பாற்றுவாயாக. ஆண்தன்மையினை விருத்தியாக்கவேண்டாம். மேனாட்டுப் பெண்களைப் போல் ஒழுகி உன் பெண்தன்மையினைப் பாழாக்கிக் கொள்ளாதே. இலக்ஷியம் வாய்ந்த பெண்மணியாக நடந்துகொள்.

பையன்களுடன் நீ தாராளமாய்ப் பழகினால், எவ்வளவு பரிசுத்தமுள்ளவளாயிருந்தாலும், அபாயப் பிராந்தியத்திலேயே நீ இருப்பாய். மாயா தேவியின் சக்தி எப்போது எப்படி இயங்கும் என்பதைப்பற்றி உனக்குத் தெரியாது. எச்சரிக்கையாய் இரு. விழித்துக்கொள். கண்களைத் திறந்துகொள்—குழந்தைத் தனமாய் இராதே. குடும்ப

கௌரவத்தைப் பாதுகாத்துக்கொள். நாவல்களைப் படிக்காதே. சினிமாச் சாலைகளுக்குப் போகாதே.

பிரார்த்தனை செய். ஜபம், கீர்த்தனம், தியானம் பண்ணுவாயாக. கீதையைப் படித்துக் கிரகிப்பாயாக. அனுசூயா தேவி, சீதை, முக்தா பாய், மீரா ஆகியோருடைய வாழ்க்கை வரலாறுகளைப் படித்துத் தெரிந்துகொள். ''ஸ்திரீ தர்மம்'' அல்லது இலக்ஷியப் பெண்மை என்னும் நூலைப் படி. மீராவைப் போன்று பிரகாசிப்பாயாக! சிவபெருமான் உனது ஆத்மீய நெறியில் வழி காட்டுவாராக.

ஓம் ஸாந்தி ஸாந்தி ஸாந்தி:

---


LIBRARY, KOVIL
A. No. 28253